# காரும் தேரும்



சி. பாலசுப்பிரமணியன் எம்.ஏ., எம்.லிட்

# காரும் தேரும்

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
எம்.ஏ.,எம்.லிட்.,பிஎச்.டி.
தமிழ்ப் பேராசிரியர்-தமிழ்மொழித் துறைத் தலைவர்
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

நறுமலாப பதுபபகம
சென்னை-600 029

முதற் பதிப்பு: 1966
ஆறாம் பதிப்பு: நவம்பர், 1984

ரூ. 10-00

விற்பனை உரிமை:
பாரி நிலையம்
184, பிரகாசம் சாலை, சென்னை-600 108

பிற நூல்கள்:

தமிழ் இலக்கிய வரலாறு
உருவும் திருவும்
கட்டுரை வளம்
மனோன் மணீயம் (பதிப்பு)
வாழையடி வாழை
முருகன் காட்சி
இலக்கிய அணிகள்
பெந்தகை மு. வ.
மலர் காட்டும் வாழ்க்கை
இலக்கியக் காட்சிகள்
சான்றோர் தமிழ்
நெஞ்சின் நினைவுகள்
நல்லோர் நல்லுரை
சங்க கால மகளிர்
"The status of women in Tamil-nadu during the Sangam Age"
"A study of the literature of the chera country"
'Papers in Tamil literature'

# முன்னுரை

'அமுத சுரபி' என்னும் இலக்கியத் திங்கள் இதழில் தொடர்ந்து பல இலக்கியக் கட்டுரைகளை எழுதி வந்தேன். பல்வேறு காலங்களில் எழுந்த தமிழ் இலக்கியங்களின் இயல்பு களையும் சிறப்புகளையும் விளக்கும் முறையில் எழுதிய கட்டுரைகளில் பல இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

பண்பாட்டை உணர்த்தவில்லையானால் ஓர் இலக்கியம் உயர்ந்த இலக்கியமாகக் கருதப்படமாட்டாது என்பர். அக் கருத்தை விளக்க எழுந்ததே 'இலக்கியம் உணர்த்தும் பண்பாடு' என்னும் கட்டுரை. யவனர்கள் தமிழ் நாட்டோடு கொண்ட தொடர்பு பழந்தமிழ மக்களின் நாகரிக மேம்பாட்டினையும், வணிகச் சிறப்பினையும் வகையுற உணர்த்துவதாகும். நூலின் தலைப்பாக அமையும் 'காரும் தேரும்' என்னும் கட்டுரை முல்லை மலரும் கார்காலத்தின் மாலையிலே தலைவன் வரவு நோக்கி வருந்தி நிற்கும் தலைவியின் வருத்தத்தினையும் வீடு நோக்கி விரைந்து வரும் தலைவனின் உணர்ச்சியினையும் ஒருங்கே புலப்படுத்துவதாகும். மணிமேகலைக் காப்பியம் உணர்த்தும் அறக் கொள்கைகளை 'மணிமேகலை உணர்த்தும் அறம்' அறிவிக்கின்றது. ''இலக்கியத்தில் தமிழ்நாடு'' என்னும் சொல் இலக்கியங்களில் எங்கெங்கு எடுத்தாளப் பெற்றிருக் கின்றது என்பதனை விளக்க எழுந்த கட்டுரையாகும். பழந் தமிழர் அருளைப் பற்றியும் பொருளைப் பற்றியும் கொண் டிருந்த எண்ணத்தினை எடுத்து மொழிவது 'அருளும் பொருளும்' என்னும் கட்டுரை. தொண்டை நாட்டின் பெருமையைப் பேசுவது 'தொண்டை நாட்டின் பெருமை' என்னும் கட்டுரை. 'தமிழ்க் காப்பியங்கள்' என்னும் கட்டுரை தமிழ்க் காப்பியங்களையும், 'கல்வியும் கருத்தும்' என்னும் கட்டுரை கல்வி பற்றிய சிந்தனைகளையும், 'வைணவ சமயத்தின் பழமை' என்னும் கட்டுரை வைணவத்திற்கும் தமிழிற்கும் உள்ள தொடர்பினையும், 'குளிர் தூங்கும் குற்றாலம்' என்னும் இறுதிக் கட்டுரை குற்றாலத்தைப் பற்றிய எண்ணங்களையும் தெரிவிப்பனவாகும்.

இந் நூலினை இலக்கியப் பசி மிகுந்த தமிழுலகம் ஏற்று ஆதரிக்கும் என நம்புகிறேன்.

சி. பா.

# உள்ளுறை


| எண் | பொருள் | | |
|---|---|---|---|
| 1. | இலக்கியம் உணர்த்தும் பண்பாடு | ... | 5 |
| 2. | யவனரும் தமிழ்நாடும் | ... | 26 |
| 3. | காரும் தேரும் | ... | 36 |
| 4. | மணிமேகலை உணர்த்தும் அறம் | ... | 48 |
| 5. | இலக்கியத்தில் தமிழ்நாடு | ... | 62 |
| 6. | அருளும் பொருளும் | ... | 72 |
| 7. | தொண்டை நாட்டின் பெருமை | ... | 85 |
| 8. | தமிழ்க் காப்பியங்கள் | ... | 97 |
| 9. | கல்வியும் கருத்தும் | ... | 110 |
| 10. | வைணவ சமயத்தின் பழமை | ... | 122 |
| 11. | குளிர் தூங்கும் குற்றாலம் | ... | 131 |

# 1. இலக்கியம் உணர்த்தும் பண்பாடு

"கல் தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றி மூத்த குடி" என்று தமிழ்க்குடியின் பழமையினையும் வீரத்தினையும் புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர் ஐயனாரிதனார் பாராட்டிப்பேசியுள்ளார். நாம் வாழும் நிலப்பரப்பு உலகின் பழமையான பகுதி என்றும், மனித நாகரிகம் வளர்ந்த தொட்டில் என்றும் அறிஞர் கூறுவர். மண்ணும் மக்களும் போலவே மொழியும் பழமைச் சிறப்புடையதாகும். மக்கள் தங்கள் உள்ளக் கருத்தினைப் பிறர்க்கு உணர்த்தும் கருவியே மொழியாகும்[1] என மொழிவர்.

மேற்புலத்து மொழி நூலறிஞர்கள், மக்கள் மனக் கருத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடியே மொழி[2] என்று குறிப்பிட்டுள்ளனர். மொழி வளர வளர வளம்பெறுகிறது. மொழி வளம் பெற்ற நிலையில் முகிழ்ப்பவையே இலக்கியங்களாகும். எனவே மொழியின் வளத்தினையும் வாழ்வினையும் காட்டவல்லன அம்மொழியில் எழுந்த இலக்கியங்களாகும்.

---

1. Language is a vehicle of thought.

2. The language is a mirror of their (people's) minds. —Pillsbury and Meader.

தங்குதடையற்ற-ஆற்றல் சான்ற உணர்ச்சிகள் அமைதியில் நினைவுகூரப்பட்டதே கவிதையாகும்[1] என்பர் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த். இன்பமான நேரங்களில் எழும் இனிமையான எண்ணங்களின் பிரதிபலிப்பே கவிதை[2] என்று கூறுவர் கவிஞர் ஷெல்லி. சிறந்த எண்ணங்களின் பதிவு ஏடே இலக்கியம் என்பர் எமர்சன் என்னும் அறிஞர்[3]. கவிஞன் பற்றுகின்ற பொருள்கள் அழகுப் பொருள்களாகவே இருந்து எஞ்ஞான்றும் மகிழ்ச்சி நல்குவன[4] என்பது கவிஞர் கீட்ஸ் அவர்கள் கூறும் கருத்தாகும். மனித சமுதாயம் சிந்திக்கத் தொடங்கிய காலத்திலிருந்து சிக்கல் அவிழாமல் கிடக்கும் எண்ணங்களின் குணபாவங்களைக் கவிஞன் இலக்கியத்தின் வாயிலாகக் குழைத்துத் தருகிறான். இதனால் கவிதை இலக்கியம் வாழ்க்கையின் உரைகல்லாகின்றது[5]. இது குறித்தே அனுபவத்தினை மொழியில் பெயர்த்துத் தருவதே கவிதை[6] என்ற கருத்தும் எழுந்தது.

---

1. Poetry is the spontaneous overflow of powerful feelings recollected in tranquility. —Wordsworth.

2. Poetry is the expression of the best and the happiest moments of the happiest and best minds. —P.B. Shelley

3. Literature is the record of best thoughts —Emerson.

4. A thing of beauty is a joy for ever —Keats.

5. Poetry is at the bottom, the criticism of life. —Matthew Arnold.

6. Poetry is the translation of experience into !nguage. —L. Abercrolawble.

சுருங்கச் சொன்னால், மொழியின் வாயிலாக வாழ்க்கையை வடித்தெடுத்துக் காட்டி உணர்த்துவதே இலக்கியம்[1] என்ற அட்சன் கருத்துப் பொருந்துவதாகும். சிறந்த இலக்கியப் படைப்பாளராம் கவிஞர்கள் காலத்தின் கருவாகவும் விளங்கிக் கருத்தாவாகவும் திகழ்கிறார்கள். உள்ளதை உள்ளவாறு கூறுவதோடு அமையாது, தங்கள் உள்ளம் உணர்ந்தவாறும் கூறுகின்றார்கள். எதிர்காலத்தைப் படைக்கும் ஆற்றலில் அவர்கள் வல்லவர்களாக விளங்குகிறார்கள். எனவே கவிஞர்களை 'மக்கள் ஆக்கா மனுவேந்தர்கள்' என்று குறிப்பிட்டார் ஷெல்லி.[2]

கவிஞன் கற்பனையுலகில் பறக்கிறான்; மனித நிலையினும் மேம்பட்ட நிலையில் நின்று பார்க்கிறான். அவன் காட்டும் கற்பனையுலகில் நம் நுண்ணுடல் நுழைகிறது. அங்கே இன்ப துன்ப உணர்ச்சிகளை நாம் பெறுகிறோம். ஆயினும் கற்பனைஉலகத் துன்பம் நமக்கு எவ்வித இடையூற்றினையும் பயப்பதில்லை; மாறாகக் கற்பனையுலகிலே நாம் உறுகின்ற துன்பம் நமக்கு இறவாத இன்பத்தையே பயந்து நிற்கிறது. இலக்கியப் பூங்காவில் நுழைந்து, தாதுண்டு திளைத்துவிட்டுத் திரும்பிய பின்னருங்கூட, அவ் இலக்கிய உலக அனுபவங்கள் நம் மனக்கண் முன் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. கவிஞன் கூறும் போக்கில் எளிய பொருள்களாக நமக்கு இதுவரை தோன்றினவெல்லாம் அழகுப் பொருள்களாக—அரிய பொருள்களாக—நமக்குத் தோற்றம் தரத் தொடங்கி விடுகின்றன. இலக்கியத்தின் உட்கிடக்கையாக ஒரு பொருள்

---

1. Literature is thus fundamentally an expression o life through the medium of language.

—W. H. Hudson.

2. Poets are the unacknowledged legislators of the world.

—P.B. Shelley

ஊடுருவி நிற்கின்றது. அவ்வுட்கோளே மனித வாழ்க்கையினைச் செம்மைப்படுத்த வேண்டும் என்னும் சீரிய நோக்கமாகும். வைகவுண்ட் மார்லே என்ற மேனாட்டு ஆசிரியர், மக்களுக்கு நல்லொழுக்கம் புகட்டுவதில் இலக்கியம் ஒரு சிறந்த கருவியாக உளது[1] என்று குறிப்பிட்டுள்ளமை ஈண்டு நோக்கத்தக்கது. கவிஞரும் திறனாய்வாளருமான மாத்யூ அர்னால்டு மனிதப் பண்பாட்டிற்கு மாறான கவிதை-மனிதப் பண்பாட்டிற்கு மாசு விளைவிக்கும் கவிதை-வாழ்க்கைக்கு எதிராகச் செய்யப்படும் புரட்சி என்பர்.[2] சிறந்த கருத்துகளைக் கொண்டிராத எந்தக் கவிஞனும் மிகப்பெரிய கவிஞனாகக் கருதப்படமாட்டான் என்றும் கூறுவர். மேலும் கவிஞர்கள் தங்கள் கவிதைகளைப் படிப்பவர் மனத்தில் விளைவிக்கும் —உருவாக்கும் மனப் பண்பாட்டினைக் கொண்டே, மதிப்பிடப் பெறுவர்[3] என்ற கூற்று முற்றிலும் உண்மையேயன்றோ! ஒப்பற்ற தத்துவஞானியாக இல்லாத ஒருவன் சிறந்த கவிஞனாக விளங்க முடியாது என்பர் கவிஞர் கோல்ரிட்ஜ்.[4]

---

1. Literature is one of the most powerful instruments for forming character. —Viscount Morley.

2. A poetry of revolt against moral Ideas is a poetry of revolt against life; a poetry of indifference towards moral ideas is a poetry of indifference towards life.
—Matthew Arnold.

3. The great poets are judged by the frame of mind they induce. —Emerson, Preface to Parnasus.

4. No man was ever yet a great poet without being at the same time a profound philosopher.
—Coleridge

மேற்குறிக்கப்பெற்ற மேனாட்டு அறிஞர்களின் கருத்துரை கொண்டு பார்த்தால், பண்பாட்டினை உணர்த்த வல்ல இலக்கியங்களே மனித சமுதாயத்திற்குப் பயன்தரும் இலக்கியங்கள் என்பது போதரும். இந்த அளவுகோல் கொண்டு நந்தமிழ் மொழியில் எழுந்துள்ள செந்தமிழ் இலக்கியங்களைச் செவ்விதின் நோக்கினால் அவை பண்பாட்டினைப் பரக்கப் பேசும் பனுவல்களாக விளங்கக் காணலாம். 'தமிழன் என்றோர் இனமுண்டு; தனியே அவர்கொரு குணமுண்டு' என்ற தமிழ்க் கவிஞர் தம் கூற்றுப் படி, பழந்தமிழ்ச் சங்க இலக்கியங்கள் பழந் தமிழரின் பண்பாட்டினைப் பாறைசாற்றி நிற்கக் காணலாம்.

முதற்கண் 'பண்பாடு[1] என்ற பைந்தமிழ்ச்சொல்லினை எடுத்துக் கொள்வோம். நாகரிகம் என்ற சொல்லும் நம் மொழியில் உண்டு. நாகரிகம் என்ற தமிழ்ச் சொல்லிற்கு ஈடான ஆங்கிலச் சொல் Civilization என்பதாகும். இது போன்றே 'பண்பாடு' என்ற சொல்லிற்கியைந்த ஆங்கிலச் சொல் Culture என்பர். நாகரிகம் என்பதனைச் சிலர் நகர மக்களின் மனவளர்ச்சி என்றும் கூறுவர். சுருங்கக் கூறின் மனிதனின் உணவு, உடை, அணிமுதலிய புற வளர்ச்சியினை 'நாகரிகம்' என்றும், மன வளர்ச்சியினை—அக வளர்ச்சியினைப் 'பண்பாடு' என்றும் குறிக்கின் வரும் இழுக்கொன்றுமில்லை. நாகரிகத்தைப் பற்றிக் கூறவந்த வள்ளுவர்,

**பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்.**

—திருக்குறள் : 580

என்று குறிப்பிட்டுள்ளார். தன்னோடு நீண்ட நாள் தோழமையோடு பழகியநண்பன் நஞ்சையே உணவாகத் தந்தாலும் அதனை மகிழ்ச்சியுடன் ஏற்று உண்டாலே நாகரிகம் என்று ஆழத்தைப் புலப்படுத்துகின்றார் திருவள்ளுவர். இக்கருத்தினையே நற்றிணை,

**முந்தை யிருந்து நட்டோர் கொடுப்ப**
**நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்**

—நற்றிணை : 355: 6-7.

என்று குறிப்பிடுகின்றது. பண்பாட்டினைப் பற்றிக் கூறவந்த இடத்தில் திருவள்ளுவர்,

**பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்**

—திருக்குறள்: 996.

என்று குறிப்பிட்டுள்ளார். பண்பாடு உள்ளவர்களாலேயே இப்பாரகம் வாழ்ந்து வருகிறது என்று திருவள்ளுவர் கூறுவரே யாஞல் பண்பாட்டின் பெருமை தானே விளங்கும். 'கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகை' யில் காணப்படும் ஒரு நெய்தற்கலிச் செய்யுள் பண்பாட்டின் இலக்கணத்தை நன்கு உணர்த்துகின்றது.

**ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்**
**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை**
**பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்**
**அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை**
**அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்**
**செறிவெனப் படுவது கூறியது மறாஅமை**
**நிறைவெனப் படுவது மறைபிறர் அறியாமை**
**முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வௌவல்**
**பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்.**

—நெய்தற் கலி 16, 6-14.

இப்பாடலிலிருந்து பண்பாட்டின் சிறப்புக் கூறுகளை யெல்லாம் நாம் நன்குணர்ந்து கொள்ளலாம்.

உறுகண் உற்றோர்க்கு உதவுவதே ஆற்றுவது என்பதும், நட்பிற்புணர்ந்தோரை விட்டு நீங்காதிருப்பதே போற்றுதல்

என்பதும், தொடர்புகொள்ளும் ஒவ்வொருவரின் இயல் புணர்ந்து அதற்கியையப் பழகுதலே பண்பாடு என்பதும், தம் உறவினைக் கோபித்து விலக்காமையே அன்பு என்பதும் அறிவிலார் கூறும் புன்சொற்களைப் பொறுத்துக் கொள்ளு தலே செறிவு என்பதும், மறைக்கப்பட வேண்டுவனவற்றை மற்றவர் அறியாது காத்தல் நிறைவு என்பதும், தனக்கு இன்னார் இனியார் என்று கருதமல் அவரவர் தம் குற்றத்திற்குரிய தண்டனையினை வழங்குதலே முறை என்பதும்; நம்மைப் போற்றார் செயல்களையும் நயந்து தாங்கிக்கொள்ளுதலே பொறை என்பதும் விளக்க முறு கின்றன.

பிறர் தம் இயல்பும் மனப்போக்கும் கண்டுணர்ந்து மதித்து, அதற்கியைய நடந்துகொள்ளலே இவண் பண்பு எனக் குறிக்கப்பட்டது. இத்தகு பண்புடையவர்களாலேயே இவ் வுலகம் இடையறாது வாழ்ந்துகொண்டிருக்கிறது. தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் பெருந்தகை மையும் பெருமனமும் உடையவர்கள் உயிர்த்திருப்பதால் உலகம் உய்ந்து கொண்டிருக்கிறது. இத்தகைய பண்பாட் டாளர்கள் இந்திரர் அமிழ்தமே தமக்குக் கிடைப்பதாக இருந்தாலும் அஃது இனிமை யுடைத்து என்று தாங்கள் மட்டுமே உண்ணமாட்டார்கள். இவர்கள் வெகுளிக்கும் வெறுப்பிற்கும் ஆட்பட மாட்டார்கள்; சோர்வு என்பதனைத் தூரத்தள்ளியவர்கள் இவர்கள் சோம்பலுக்கு இரையாகாமல் செயலாற்றும் இவர்கள், அஞ்சவேண்டுவன இவை என்று அறவோர் உரைத்தனவறிற்கு அஞ்சி, புகழ் என்றால் தம்இன்னுயிரையும் ஈந்து, பழியென்றால்உலகையே பெறுவதாயிருப்பினும் வேண்டாம் என ஒதுக்கி, தமக் கென்றில்லாமல் பிறர்க்கென்றே பெரிதும் வாழ்வதால் இவ் வுலகம் இயங்கிக்கொண்டிருக்கின்றது என்று புற நானூற்றுப் புலவருமாய கடலுள்மாய்ந்த இளம் பெருவழுதி புகன்றுள் ளார்.

**உண்டா லம்மஇவ் வுலகம்; இந்திரர்**
**அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்**
**தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;**
**துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவ தஞ்சி**
**புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின்**
**உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்!**
**அன்ன மாட்சி அனைய ராகித்**
**தமக்கென முயலா நோன்றாள்**
**பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.**

—*புறநானூறு: 182*

*'சேரச் சேரச் சேர்ப்பதில் ஆசையாம்' என்றும், 'அகில மெல்லாம் அரசாண்டாலும் ஆசைக்கோர் அளவில்லை' என்றும் பெரியோர் கூறுவர். தமக்குக் கிடைத்தவற்றைப் பிறருக்குக் கொடுத்து வாழ்வதே சிறந்த வாழ்வாகும்!— அறநூல்களில் உணர்த்தப்படும் அறங்களில் தலையாய அறம் பகுத்துண்டு வாழும் பண்பாடேயாகும். இதனைத் திருவள்ளுவர்,*

**பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாந் தலை.**

—*திருக்குறள்: 322*

*என்று அழகுபடக் கூறியுள்ளார். பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் வறுமையில் வாடி நொந்து, தம் வறுமை தீரக் குமண வள்ளலை நாடிச் சென்றார், அவ் வள்ளலும் வளத்தினை வாரி வழங்கினான். அதனைப் பெற்றுத் தன் வீடு திரும்பிய புலவர் நேற்று நிலவிய வறுமைத் துன்பத்தை மறந்து, நாளைக்கும் அப்பொருள் வேண்டுமே என்ற நினைவிற்கும் இடங்கொடாமல், தன் மனைவியை விளித்துப் பின்வருமாறு கூறுகின்றார்:*

''உனக்கு விருப்பமானவர்களுக்கும், உன்னை விரும்பியவர்களுக்கும், கற்பிற் சிறந்த உன் உறவினர்க்கும், வறுமைக் காலத்தில் உனக்கு உதவியவர்களுக்கும், மற்றும் எவர்க்கும் இவ்வளவு தான் என்று வரையறை செய்யாது, பொருள் வழங்குதலில் அவ்வப்போது வந்து என் கருத்தினைக் கேட்டுக் கொண்டு மிராது, பழந்தூங்கு முதிரமலைக்குத் தலைவனாகிய குமணவள்ளல் வாரியளித்த செல்வத்தை, இப் பொருளைச் சேமித்து வைத்து, நாளைக்கு நாம் நலமுற வாழ்வோம் என்ற எண்ணத்திற்கும் இடங் கொடாமல் எல்லோர்க்கும் வாரி வழங்குவாயாக.'' இவ்வாறு கூறும் பெருஞ்சித்திரனாரின் பண்பட்ட மன நிலையினை எண்ணி எண்ணி வியக்கின்றோம். அவ்வழகிய பாடல் வருமாறு:

**நின் நயந்து உறைநர்க்கும் நீ நயந்து உறைநர்க்கும்**
**பன் மாண் கற்பின் கிளைமுத லோர்க்கும்**
**கடும்பின் கடும்பசி தீர யாழநின்**
**நெடுங்குறி எதிர்ப்பை நல்கி யோர்க்கும்**
**இன்னோர்க்கு என்னாது என்னொடும் சூழாது**
**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே!**
**பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்**
**திருந்துவேல் குமணன் நல்கிய வளனே.**

—புறநானூறு: 163.

மேற்கூறிய இவ்விரண்டு புறநானூற்றுப் பாடல்களின் உட்பிரிவாக—சாரமாக இலங்குவதுதான்,

**பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை**
**வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்**

—திருக்குறள்: 44.

என்னும் குறளாகும். இக்காலத்தில் சிலர் கொடை வழங்குதல் என்பது விளம்பர நோக்கிற்காகவும் மற்றும் வேறு பல நோக்கிற்காகவும் அமையக் காணலாம். மேலும் பலர் இந்தப் பிறவியில் அறம் செய்தால் மறுபிறப்பில் பலனடையலாம் என்ற எண்ணத்திலும் அறம் செய்வதுண்டு. ஆய் அண்டிரன் என்னும் குறுநில மன்னன் அவ்வாறின்றி அறத்தினை அறத்திற்காகவே மறுமை நோக்கின்றிச் செய்தான் என்று புறநானூறு கூறும்:

**இம்மைச் செய்தது மறுமைக் காம்எனும்**
**அறிவிலை வணிகன் ஆய் அலன்.**

—புறநானூறு; 134: 1—2.

மேலும், தேய்தலும் பெருகலும், மாய்தலும், பிறத்தலுமாக உள்ள சந்திரன், வாழ்வெனப்படுவது மேடுபள்ளங்களை, இருள் ஒளியினை, நன்மை தீமைகளைக் கொண்டது என்பதனை அறியாதோரையும் அறியக்காட்டி நிற்கிறது:

**தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்**
**மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்**
**அறியா தோரையும் அறியக் காட்டித்**
**திங்கள் புத்தேள் திரிதரும் உலகம்**

— புறநானூறு; 27: 11—14.

இத்தகு நிலையில் வாழ்தலை இனிதாகவும் கொள்ளாமல், ஓர் வெறுப்பு வந்தவிடத்து இனிமையற்றுக் கொடுமை உடையதாகவும் கருதாமல், சமநோக்கோடு கருதி நம் கடப்பாட்டினைச் செவ்வனே ஆற்றிவர வேண்டும், இதற்கும் வாழ்வில் வரும் தீதினையும் நல்லதனையும் ஒன்றாக எண்ணுதலோடு, நோதலும். தணிதலும், சாதலும் பிறந்த போதே மூலத்தே முடிந்த ஒன்றாகக் கருத வேண்டும் என்பதும், பேராற்றின் பெரு வெள்ளத்தின் வழிச் செல்லும் புணை போன்று, உயிர்

ஊழின் முறைப்படியே இயங்கும் என்பதும், பெரியோரை வியக்காதிருத்தலும், அதனினும் சிறியோரை இகழாதிருத்தலும் வேண்டும் என்பதும், இவையே 'எவ்வூரினையும் நம்மூராகவும், எம் மக்களையும் நம் உறவினராகவும் கொள்ளும் உயரிய நெறி' என்பதும், கணியன் பூங்குன்றனார் என்ற சங்க கால அறச் சான்றோர் நமக்கு அறிவுறுத்தும் பண்பாட்டு மனவமைதிகளாகும். அவர் பாடிய பாடல் வருமாறு:

**யாதும் ஊரே யாவரும் கேளிர்**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா**
**நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன**
**சாதலும் புதுவ தன்றே வாழ்தல்**
**இனிதென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்**
**இன்னாது என்றலும் இலமே மின்னொடு**
**வானம் தண்டுளி தலைஇ யானாது**
**கல்பொரு திரங்கும் மல்லற் பேர்யாற்று**
**நீர்வழிப் படூஉம் புணைபோல ஆருயிர்**
**முறைவழிப் படூஉம் என்பது திறவோர்**
**காட்சியில் தெளிந்தனம் ஆகலின் மாட்சியிற்**
**பெரியோரை வியத்தலும் இலமே**
**சிறியோரை இகழ்தல் அதனிலும் இலமே.**

—*புறநானூறு : 192*

இவ்வாறு சம நிலையான—நடுவுநிலையான மனத்துடன் வாழும் வாழ்வில் ஏமாற்றம் இல்லை; தோல்வி இல்லை. மேலும் நிலம் பெயர்ந்தாலும் ஒருவன் சொல்லிய சொல்லினின்றும் மாறக்கூடாது என்றும், நீரின்றி இயங்க முடியாத உயிரினங்களுக்கும் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோராவர் என்றும், அறனும் பொருளும் இன்பமும் ஆகிய இம் மூன்றிற்கு முயல்வதே செல்வத்தின் செயலாக இருக்க வேண்டும் என்றும் அவ்வாறு செயலாற்றாமை அச்செல்வத்தினைப் போற்றாமையை

ஒக்கும் என்றும், நிலம் பெயர்ந்தாலும் ஒருவன் செய்த உதவியினை ஒரு நாளும் மறத்தலாகாது என்றும், வாழ்தல் வேண்டிப் பொய் கூறாமல் மெய்யே கூறல் வேண்டும் என்றும், செல்வத்தின் பயன் ஈதலிலே உள்ளது என்றும், அச் செல்வத்தைத் தாமே துய்ப்போம் என முயன்றால் துன்பங்கள் பல வந்து தோன்றும் என்றும், கொடு என்று கேட்பது இழிவென்றும் அவ்வாறு கேட்டும் கொடாமை அதனினும் இழிவென்றும், எடுத்துக்கொள் என்று மனமுவந்து ஈவது உயர்ந்தது என்றும், அவ்வாறு கொடுத்தும் அதனைக் கொள்ளாமையே அதனினும் உயர்வுடைத்து என்றும், நல்லது செய்யாவிடினும் கெடுதலாவது செய்யா திருத்தல் எல்லாரும் விரும்புவதும் நல்லாற்றுக்கண் வழிப்படுத்துவதுமான நெறியென்றும் புறநானூறு பண்பாட்டின் சிறப்பினையெல்லாம் பரக்கப் பேசுகின்றது. பண்பாட்டின் உயிர்நாடியான சில தொடர்களை ஈண்டுக் காண்க:

**நிலம் பெயரினும் நின்சொற் பெயரல்**

*—புறநானூறு: 3: 14*

**நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே**

*—புறநானூறு: 18: 18—19*

**அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்**
**ஆற்றும் பெருமநின் செல்வம்**
**ஆற்றா மைந்நிற் போற்றா மையே.**

*—புறநானூறு: 28: 11—17*

**நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்**
**செய்தி கொன்றோர்க்கு உய்தி யில்லென**
**அறம்பா டிற்றே.**

*—புறநானூறு: 34: 5-7*

வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவல்

—புறநானூறு 139: 5-6

செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்போம் எனினே தப்புந பலவே

—புறநானூறு: 189: 7-8

ஈயென இரத்தல் இழிந்தன்று; அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று

—புறநானூறு: 204:1-4

நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின். அதுதான்
எல்லாரும் உவப்பது அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே.

—புறநானூறு: 195: 6-9

இவையன்றியும் அரசர்க்கென்றே சில பண்பாட்டு உண்மைகள் புலவர்களால் அந்நாளில் வலியுறுத்திக் கூறப் பட்டுள்ளன. மக்கட்கு நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று: மன்னனே உயிர் என்பதும், அரசனின் கொற்றம் அறநெறியிற் செலுத்தப்படல் வேண்டும் என்பதும், அவன் தம்மவர் என்று கோல் கோடாமலும், பிறர் என்று குணங் கொல்லாமலும், அருளையும் அன்பையும் நீக்கி நீங்கா நரகம் செல்பவர்களைப் போலில்லாமல் சிறு குழந்தையைக் கவனமாக வளர்ப்பவர் போன்றும், சூரியன் போன்று ஆண்மையும், சந்திரனைப் போன்று மென்மையும், மழையைப் போன்று கொடையும், உடையவராய் இருத்தல்

வேண்டும் என்பதும் புறநானூறு கூறும் அரசியற் பண்பாடு களாகும். இவற்றை

**நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்**

—புறநானூறு: 186; 1–2

என்றும்,

**அறநெறி முதற்றே அரசின் கொற்றம்**
**அதனால் நமரெனக் கோல்கோ டாது**
**பிறரெனக் குணங்கொல் லாது**
**ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்**
**திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்**
**வானத் தன்ன வண்மையும் மூன்றும்**
**உடையை யாகி இல்லோர் கையற**
**நீநீடு வாழிய நெடுந்தகை**

—புறநானூறு; 55: 10-17

என்றும்,

**அருளும் அன்பும் நீங்கி நீங்கா**
**நிரயங் கொள்பவரோடு ஒன்றாது காவல்**
**குழவி கொள்பவரின் ஓம்புமதி**

—புறநானூறு: 5: 5-7

என்றும் புறநானூற்றுத் தொடர்கள் புலப்படுத்தும். இத்தகைய பண்பாடு நிறைந்த அரசர்கள் மாய்ந்து விட்டால் 'வல்லாங்கு வாழ்தும் என்னாது, வடியா நாவின் 'வல்லாங்கு பாடி'த் தீய செயலினைச் சிந்தையாலும் நினைக்காத புலவர் திருக்கூட்டம் கையற்றுக் கலங்கியது. மலரின்கண் மாறாத விருப்பமுடைய இளையோரும் வளையோரும் பாணனும் பாடினியும் மற்றும் எவரும் ஆருயி ரனைய மன்னவன் மாய்ந்து போனால் பூத்த முல்லைப் பூவினையும் சூடாமல் வெறுத் தொதுக்குவர்:

**இளையோர் சூடார் வளையோர் கொய்யார்**
**.............................. ......**
**பாணன் சூடான்! பாடினி அணியாள்**
**...................................**
**வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை**
**முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே.**

*—புறநானூறு: 242*

இதுகாறும் புறவாழ்வில் பழந்தமிழர் காட்டிய பண்பாட்டு விளக்கத்தினைக் கண்டோம். இனி, அகவாழ்வில் அவர் தம் மனப்பண்பாடு எவ்வாறு தூய்மையும் செம்மையும் கொண்டிலங்கியது என்பதனைக் காண்போம்.

மனைவாழ்விற்கு விளக்கமாய்த் திகழ்பவள் மனைவியே, புற வாழ்விற்கு ஆடவன் பொருத்தமானவனாய் விளங்கினன்.

**மனைக்குவிளக் காகிய வாணுதல் கணவன்**
**முனைக்குவரம் பாகிய வென்வேல் நெடுந்தகை.**

*—புறநானூறு 314: 1-2*

இத்தகைய வாழ்வுப் போக்கில் ஆடவனுக்கு அவன் மேற்கொண்ட கடமையே—வினையே உயிராகவும், மனை வாழ்வு வாழும் மகளிர்க்கு அவர்தம் கணவரே உயிராகவும் துலங்கினர்.

**வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்**

*—குறுந்தொகை: 125: 1-2*

காதல் நிலையிலே தலைவியர் பண்பு நலம் பாராட்டப் படுவதாயுளது. ஒரு நாள் தலைவி தன் தோழியரோடு சென்று நெய்தலங்கானலின் வெண்மணலில் விளையாடினாள். அப்பொது அவ் வெள்ளிய மணலில் புன்னைவிதை

யொன்றை ஊன்றிவிட்டு வந்தாள். தான் வேரூன்றி வித்திய புன்னை விதை முளைத்து முளை தோன்றி நிற்பதைப் பின்னொரு நாள் கண்ட தலைவி, அதனை நோக்கி மிகவும் மகிழ்ந்து, நெய் கலந்த இனிய பாலை நீராக வார்த்து இனிமையோடு வளர்த்துவரும் அன்னை அவளை நோக்கி 'நீ வளர்த்துவரும் புன்னை நும்மினுஞ் சிறந்த தன்றோ? அது நும்முடன் பிறந்த தங்கையாந் தகுதி யுடையது' என்று புன்னை மரத்தின் சிறப்பினைப் பொருந்த உரைத்தனள். ஆதலின் தன் தங்கையாகிய அப்புன்னை மரத்தின் எதிரில் தலைவனோடு நகைத்து விளையாடி மகிழ்ந்திருப்பதற்குப் பெரிதும் நாணினாள் தலைவி.

இவ்வாறாகப் புன்னையையும் தன் உடன் பிறப்பாக நினைந்து, அதன் எதிரில் தன் நெஞ்சமர் காதலனோடு பேசுவதற்கு நாணிய தலைவியின் காதற்பண்பாடு வியந்து போற்றற்குரியதன்றோ? இப்பண்பாட்டினை,

**விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி**
**மறந்தனம் துறந்த காழ்முளை அகைய**
**நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப**
**நும்மினுஞ் சிறந்தன்று நுவ்வை ஆகுமென்று**
**அன்னை கூறினள் புன்னையது சிறப்பே**
**அம்ம நாணுகம் நும்மொடு நகையே**

—நற்றிணை: 172: 1-6

என்று நற்றிணை நயம்பட நவில்கின்றது.

தலைவன் தலைவியரிடையே வளரும் காதல் நிலை, பின் கற்புக் காலத்தில் இல்லறத்தில் தலைப்படும் பொழுது அவ் இல்லறத்தினைச் சீர்மைப்படுத்தும் தன்மை வாய்ந்த தாகும். கடிமணம் புரிந்து கொண்டு தலைவனும் தலைவி யும் இல்லறம் நடாத்தும் கடிநகர்க்கு வந்தாள் தோழி. அவர்கள் இல்லறம் எவ்வாறு நடத்துகின்றனர் என்பதனை

நேரிற் கண்டுபோக வந்தாள் அவள். தலைவியோ தலைவனுக்காகச் சமையல் செய்யும் பணியில் ஈடுபட்டிருந்தாள் ''கட்டித் தயிரைத் தன் காந்தள் விரல்களால் பிசைந்து, நெகிழ்ந்த சேலையினையும் அக் கையாலேயே பற்றிச் சரி செய்துகொண்டு குவளைக் கண்கள் தாளிப்புக் புகையினைக் கொள்ளவும் வருந்தாது தாளிதம் செய்து—தயிர்க்குழம்பு, புளிக்குழம்பு வைத்தாள். கணவன் சாப்பிடும் பொழுது 'இனிது' எனப் பாராட்டிக் கூறி மகிழ்ந்து உண்டான். இதனைக் கண்ட தலைவியின் முகத்தில் இளநகை தோன்றியது''. இவ்வாறு இன்பமான இல்லறப் பண்பாட்டினைக் கூறும் குறுந்தொகைப் பாடல் வருமாறு:

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇ
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.

—குறுந்தொகை : 167

இத்தகைய குடும்பப் பண்பாடு நிறைந்த பெண் இப் பிறவியில் தனக்கு வாய்த்த கணவனே மறுபிறவியிலும் தனக்குக் கணவனாக அமைய வேண்டும் என்று விரும்புகின்றாள்.

இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரென் கணவனை
யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே.

—குறுந்தொகை 49 : 3—5

என்று குறிப்பிடுகின்றாள். பிறிதொரு தலைவி இனிப் பிறப்பே வேண்டாம், பிறந்தால் காதலனை மறக்க வேண்டி வந்துவிடுமோ எனக் கவலை கொள்கிறாள்:

**சாதல் அஞ்சேன்; அஞ்சுவல் சாவின்**
**பிறப்புப்பிறி தாகுவது ஆயின்**
**மறக்குவேன் கொல்என் காதலன் எனவே.**

*—நற்றிணை : 397 : 7—9*

இன்பத்தில் யாராலும் பங்கு பெறமுடியும்; துன்பத்தில் பங்கு கொள்வதென்பது பலருக்கு அரிதான ஒரு செயல். ஆயினும் சங்க காலத்து மகளிர் பண்பாடு இதற்கு மாறானது. தலைவி தலைவனின் துன்பத்திற்குத் துணை யாக இருப்பதனையே இன்பமாகக் கருதுகின்றாள்.

**..................—நும்மொடு**
**துன்பம் துணையாக நாடின் அதுவல்லது**
**இன்பமும் உண்டோ எமக்கு?**

*—பாலைக்கலி : 6 : 9—11*

பொருள்வயிற் பிரிந்து சென்றிருக்கிறான் தலைவன். அவன் வரும் நாளினை எண்ணி எண்ணி வாழ்கிறாள் தலைவி. தன் அழகிய முன்கையிலே கிளியினை ஏந்தி, 'தலைவன் இன்று வருவார் என்று சொல்' என்று வீட்டில் உள்ளார் யாரும் அறியாத வகையில் மென்மையான சொற்களை மிழற்றி நிற்கிறாள் நாணுடைய தலைவி. இவ்வழகுக் காட்சியினை ஓர் அகப்பாடல் அழகுற உணர்த்தும்:

**செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி**
**இன்றுவரல் உரைமோ சென்றிசினோர் திறத்தென**
**இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென**
**மழலை இன்சொல் பயிற்றும்**
**நாணுடை அரிவை.....**

*—அகநானூறு : 34 : 14—18*

குடும்பத்தினரும் தன் கவலையினை அறிதல் வேண்டா எனக் குடும்பப் பண்பாட்டினைக் காக்கும் தலைவியின் அரிய மனநிலை இப்பாட்டால் நமக்கு நன்கு புலனாகின்றது.

இத்தகைய கற்பின் திண்மைதான் மனைவாழ்வின் மகிழ்ச்சிக்கு அடிப்படையாகும். பரத்தைமாட்டுப் பிரிந்து மீண்டுவந்த தலைவன்பால் ஊடாமல் நாம் நம் குடும்பப் பொறுப்புணர்ந்து கடமைகளை ஆற்றுவோம் என்று கூறுவதோடு, ''நம்பால் அன்பு அடியோடு அற்று அவர் நம் நலத்தினை மிகவும் அழித்திருந்தாலும், உயிரே போகும்படி நமக்கு உறுகண் விளைத்திருப்பினும் அவர் நமக்கு அன்னையும் அத்தனும் ஆவர். எனவே அவர் பால் வெறுப்புக் கொள்வதற்கு ஏது ஒன்றுமில்லை'' என்று தன் தோழியினை வற்புறுத்தும் தலைவியின் அரிய மனநிலையும், குடும்பப் பண்பாட்டினைக் காக்க வேண்டும் என்ற பொறுப்புணர்ச்சியும் எஞ்ஞான்றும் மறக்கத் தக்கன அல்ல:

**நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்**
**இன்னுயிர் கழியினும் உரையல் நமக்கவர்**
**அன்னையும் அத்தனும் அல்லரோ**
**புலவியஃ தெவனோ அன்பிலங் கடையே.**

—குறுந்தொகை : 93

பண்பாட்டின் பயனாகத் துலங்கும் இந்த மன வளர்ச்சிதான் தன் கணவன் செய்யும் கொடுமைகளைப் பிறர் அறியா வண்ணம் மறைத்து வைக்கச் செய்கிறது.

**காஞ்சி யூரன் கொடுமை**
**கரந்தனள் ஆகலின் நாணிய வருமே**

—குறுந்தொகை : 10 : 4—5

என்று குறுந்தொகை அடிகள் இத்தகைய அரிய மனப்பண்பாட்டினை அல்லவா நமக்கெடுத்துரைக்கின்றன!

இவ்வாறாக வளர்ந்த கற்புமேம்பாட்டுப் பண்பினை இடைக்காலத்தில் கம்பர் பின்வரும் பாடலில் காட்டியுள்ளார்.

**போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்**
**கொள் திண்தோள்**
**மாரன் அனையான் மலர்கொய்திருந் தானை வந்தோர்**
**காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப**
**ஆரென்ன லோடும் அனலென்ன அயிர்த்துயிர்த்தாள்.**

—*கம்ப : பால : பூக்கொய் : 18*

போரெனில் வீங்கும் திண்தோளினையுடைய கட்டழகுக் காளை ஒருவன் தன் காதல் தலைவியின் கூந்தலில் சூடும்பொருட்டு ஒரு சோலையில் மலர் கொய்து கொண்டிருக்க, மேகம் போன்ற கூந்தலினையுடைய அவனுடைய காதலி மெள்ள அவன் அறியாது அவன் பின்வந்து அவன் கண்களைத் தன் இரு கைகளாலும் பொத்த, அவன் ''யார்?'' என்று கேட்ட அளவில் அனல் போலும் பெருமூச்சு விட்டுத் தன் சீற்றத்தினைப் புலப் படுத்தினாள் என்பதாம். இப்பாடலின் கருத்து நுட்பம் உணர்ந்து மகிழ்தற்குரியது.

இதே கருத்தினையே வள்ளுவரும்,

**வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்**
**யாருள்ளித் தும்மினீர் என்று**

—*திருக்குறள் : 1317*

**தும்முச் செறுப்ப அழுதாள் நுமர் உள்ளல்**
**எம்மை மறைத்திரோ என்று**

—*திருக்குறள் ; 1318*

என்று தும்மலில் வைத்துப் புலவி நுணுக்கத்தினை நயம்படக் கிளத்திக் கூறுவர்.

இதனையே பிற்காலத்தில் வேதநாயகம் பிள்ளை அவர்கள் பின்வரும் பாடலில் கூறுவர்:

**ஓவியநீள் சுவரெழுதும் ஓவியத்தைக் கண்ணுறுவான்**
**தேவியையான் அழைத்திடஆண் சித்திரமேல் நான்பாரேன்**

**பாவையர்தம் உருவெனில் நீர் பார்க்கமனம் பொறேன்**
**என்றாள்**
**காவிவிழி மங்கைஇவள் கற்புவெற்பின் வற்புளதால்**

என்று வழிவழியாக வரும் கற்பு மேம்பாட்டினைக் கவினுறக் காட்டுவர்.

இலக்கியங்கள்—குறிப்பாகச் சங்க இலக்கியங்கள் வாழ்வின் செம்மைப்பாட்டிற் கியைந்த முறையில் சிறந்த பண்பாட்டுக் கூறுகளைத் தம்மிடையே பொதிந்து வைத்துள்ளன. ''நாடாக இருந்தாலும் காடாக இருந்தாலும் பள்ளமாக இருந்தாலும் மேடாக இருந்தாலும் கவலையில்லை; அந்நாட்டில் உள்ள மக்கள் மனப்பண்பாடு நிறைந்தவர்களானால் அந்த நாடு வாழ்ந்துவிடும்'' என்று அறிவிற் சிறந்த ஔவை பிராட்டியார் கூறுகிறார்:

**நாடா கொன்றோ காடா கொன்றோ**
**அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
**எவ்வழி நல்லவர் ஆடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே.**

—புறநானூறு : 187

இவ்வாறாக, நந்தமிழ் இலக்கியங்கள் நல்ல பல பண்பாடுகளை நமக்கு உணர்த்தி, நம் வாழ்வு பல்லாற்றானும் வளம்பெற்றுச் சிறக்க இன்றளவும் வழிகாட்டி வருகின்றன.

## 2. யவனரும் தமிழ்நாடும்

**தொ**ன்னிலமாம் நன்னிலம் நம் தென்னிலமாம் தமிழ் நிலம். இம் மண் பழையது; மொழி பழமையுடையது; மக்கள் இனம் மிக மிகப் பழமையுடையது. மனித நாகரிகம் எனும் குழந்தையைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டிப் பண்பாட்டிக் கண்ணின் இமைபோல் காத்து வளர்த்தவர்கள் தமிழர்கள். அவர்தம் வரலாறு பழமையுடையது; பெருமை யுடையது; பாராட்டுக்குரியது. உலகின் பிறநாடுகள் நாகரிகம் பெறாததற்கு முன்னால் சீரியசெம்மையான வாழ்க்கை வாழ்ந்தவர்கள் தமிழர். அவர்தம் வாழ்வு சீரோடும் சிறப்போடும் துலங்கியமையால்தான் அவர்தம் வாழ்வினைப் பிரதிபலிப்பனபோல் அமைந்த இலக்கியங்கள் தூய்மையும் செம்மையும் பெற்றுத் துலங்குகின்றன. அத்தகு சிறந்த இலக்கியங்களில் சிறக்க முன்னணியில் நிற்பன சங்க இலக்கியங்களாகும். சங்க இலக்கியங்களைப் படிக்கும் பொழுது ஒரு பெருமித உணர்வு தோன்றுதல் இயற்கை. பழந்தமிழர் தம் செம்மாந்த சிறப்பு வாழ்க்கை வடித்தெடுக் கப் பெற்ற வளமான இலக்கியங்களே சங்க இலக்கியங் களாகும்.

இத்தகு பெருமைக்குரிய பழந்தமிழர் வேறு பலநாட் டவரோடும் வணிக, நாகரிகத் தொடர்பு கொண்டிருந் தனர். கிறித்தவ நூற்றாண்டுத் தொடக்கத்திற்குச் சிறிது முன்னும் பின்னும் வரலாற்றுப் பெருமை நிறைந்த இனமாக

விளங்கியவை கிரேக்க இனமும் உரோம இனமும் ஆகும். இவர்கள் தமிழ் இலக்கியத்தில் பொதுவாக **யவனர்** என்று குறிப்பிடப் பெறுகிறார்கள். பெரும்பாணாற்றுப் படையின் உரையில் யவனர் என்ற சொல்லிற்குச் 'சோனகர்' என்று பொருள் விரிக்கிறார் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர். பின்னர் இச் சொல் துருக்கரையும் அரேபியரையும் மிலேச்சரையும் குறிக்கவும் வழங்கியது என அறிகிறோம். அயோனியா. கிரீசு, பாக்டீரியா, அரேபியா முதலான நாடுகள் பொதுவாக யவனம் என்று வழங்கப்பட்டுள்ளது என்பதனைத் தமிழ் இலக்கியம் பயில்வோர் உணர்ந்து கொள்வர். யவனர்களைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கிங்களில் ஏறத்தாழப் பத்து இடங்களில் வருகின்றன. சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றிய நூல்களான சிலப்பதிகாரம், மணி!மேகலை முதலிய நூல்களிலும் பிற்காலக் காவியங்களான சீவகசிந்தாமணி, பெருங்கதை, சூளாமணி முதலிய நூல்களிலும் யனவரைப் பற்றிய செய்திகள் விரவி வந்துள்ளன.

யவனர்கள் தமிழ் நாட்டோடு வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதற்குத் தமிழ் இலக்கியச் சான்றுகளும் வரலாற்றாசிரியர்கள் எழுதிவைத்துள்ள குறிப்புகளும் நிறைய உள்ளன. இச்செய்திகள் குறித்துச் சிறிது ஈண்டு விரிவாகக் காண்போம்.

கி. மு. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்ததாக வரலாற்று அறிஞர்கள் கூறும் சாலமன் என்னும் வேந்தனுக்குத் தமிழ் நாட்டிலிருந்து மரக்கலங்கள் வயிலாக மயிற்பீலி, யானைத் தந்தம், நறுமணப் பொருள்கள் முதலியன அனுப்பப் பெற்றன. மயிலைக் குறிக்கும் தோகை என்னும் தமிழ்ச் சொல் ஈபுரு மொழியில் 'துகி' என்று ஆனது. அதேபோன்று 'அகில்' என்ற நறுமணப் பொருள் 'அகல்' என்றானது. பொனீசியர்கள் சேரநாட்டு மிளகினை மிகவும் விரும்பித் தம் கப்பல்களில் ஏற்றிச் சென்றனர். பாரசீகத்திற்கும்

ஆப்பிரிக்காவிற்கும் அழகிய எருதுகள் இங்கிருந்து அனுப்பப்பட்டன. கி. மு. முதல் ஆயிரம் நூற்றாண்டிலேயே பிலிப்பைன்ஸ் தீவுகளோடு வணிக உறவு இருந்திருக்கவேண்டும் என்பது தெரியவருகிறது. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் பெயர் பெற்ற பாபிலோன் நகரத்திற்குத் தமிழகத்திலிருந்து அனுப்பப்பட்ட அரிசி, சந்தனம், மயில் முதலிய பொருள்கள் தமிழ் மொழிப் பெயர்களாலேயே அங்கும் வழங்கப்பட்டன. தமிழ் அரிசி, கிரேக்க மொழியில் 'ஒரிசி' ஆனது. சந்தனம் 'சாண்டல்' ஆனது. மயிலை உணர்த்தும் தமிழ்ச் சொல்லாம் தோகை 'துகி' ஆனது. இஞ்சிவேர், 'சிக்கி பெரஸ்' என்றும் 'பிப்பிலி' 'பெப்பரி' என்றும் வழங்கின. இவையெல்லாம் பழந்தமிழர் கடல் வாணிகத் துறையில் கண்ட வெற்றிச் சிறப்பினை வெளிப்படுத்துவனவாகும்.

பர்மா, மலேயா, சீன நாடுகளோடும் தமிழர் வாணிகம் நடைபெற்றது என்பதற்குச் சான்றுகள் உண்டு. யூதர், பொனீசியர் முதலானோரும் வணிகத் தொடர்பு கொண்டனர். கி. மு. ஆறாம் நூற்றாண்டில் மேலை நாடுகளில் வணிகப் பெருநகரமாய்த் துலங்கிய பாபிலோன் நகரில் இங்கிருந்து சென்ற வணிகர்கள் குடியேறி வாழ்ந்தனர். உரோமப் பேரரசனான அகஸ்டஸ்ஸை கி. மு. 21-ஆம் ஆண்டில் பாண்டிய அரசனிடமிருந்து ஒரு வணிகர் தூதுக்குழு சென்று கண்டது. இதன் விளைவாக இரு நாடுகளுக்கிடையிலும் வணிகம் செழித்தோங்கியது. உரோம வணிகர்கள் தமிழ் நாட்டு முத்து, யானைத்தந்தம், மஸ்லின் ஆடை, மிளகு முதலிய பொருள்களை மிகுந்த விலை கொடுத்து வாங்கி, ஒன்றுக்கு நூறு விலை வைத்துத் தங்கள் நாடுகளில் விற்றனர். இதனால் ஆண்டொன்றுக்கு உரோம நாடு பண்டமாற்றாக ஆறு லட்சம் பவுன் தமிழகத்திற்குத் தந்தது. உரோமாபுரிச் செல்வச் சீமாட்டிகள் தென் பாண்டி முத்துகளை அணிவதில் பெருவிருப்புக் காட்டிப் பெரும்பொருள் செலவழித்தனர். இந்த ஆடம்பர வேட்கையால் உரோம நாட்டின் பொருளாதார நிலை

தாழ்வுற்றது. எனவே அந்நாட்டுத் தலைவர்கள் இச் செயலினைக் கண்டித்துக் கூறினர்.

இத்தகைய செய்திகள் தமிழர் கடல் வாணிகத்தில் பெற்ற பெருவெற்றியை விளம்பரப்படுத்துகின்றன. பெரிப்ளூஸ் என்னும் நூலினை, கி. பி. 60-ல் எழுதிய ஆசிரியர் சேரநாட்டுத் தொண்டி, முசிறி, குமரி, சோழ வளநாட்டுக் காவிரிப்பூம்பட்டினம், பாண்டி நாட்டுக் கொற்கை முதலிய துறைமுகங்களை நேரிற் கண்டு சிறந்த குறிப்புகளை எழுதிவைத்துள்ளார். கி. பி. 150-ஆம் ஆண்டில் வாழ்ந்த தாலமி என்பவர் பெரிப்ளூஸ் ஆசிரியரை விட மேலும் சிறந்த விவரங்களைக் கொடுத்துள்ளார். தொண்டி, முசிறி, கொட்டாரக்கரை, கோட்டயம், பொரக்காடு, கருவூர், மதுரை, உறையூர், பொதுகா (புதுச்சேரி), சோபட்டணம் (மரக்காணம்), மாவிலங்கை, குமரி, கொற்கை, நாகப்பட்டினம், காவிரிப் பூம்பட்டினம், மோகூர், கோடிக்கரை முதலிய நகரங்களை அவர் தம் நூலில் குறித்துள்ளார்.

தாலமி என்னும் வரலாற்றாசிரியர் குமரி, கொற்கை, முசிறி, நாகப்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம், புதுச்

---

The extravagant importation of luxuries from the west without adequate production of commodities to offer in exchange, was the main cause of the successive depreciation and degradation of the Roman currency leading finally to its total repudiation......So that Pliny complained in 70 A. D. that India drained gold to the value of nearly a million pounds a year giving bake her own wares, which are sold among as at fully a hundred times their first cost.

—P. T. Srinivasa Iyengar,—History of the Tamils P. 305 & 308,

சேரி, மரக்காணம் முதலிய தமிழ்நாட்டுத் துறைமுகப் பட்டினங்களைப் பற்றிய செய்திகளைத் தம் நூலில் விவரமாகக் குறித்துச் சென்றுள்ளார். மதுரை மாநகரிலும் வையை ஆற்றுப்படுகையிலும் கிடைக்கும் எண்ணற்ற உரோமச் செப்பு நாணயங்களைக் கொண்டு யவனர் பலர் மதுரையில் தங்கி வாழ்ந்தனர் என அறியலாம். சேர நாட்டுக் கடற்கரையில் யவனக் குடியிருப்பு ஒன்றும், அகஸ்டஸுக்கு ஒரு கோயிலும், இக்காலப் பாண்டிச் சேரிக்கு அண்மையில் உள்ள அரிகாமேடு பகுதியில் யவனக் குடியிருப்பு ஒன்றும் இருந்திருக்க வேண்டும் என வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். ஆர்க்கிமிடீஸ் என்பவர் சைரக்யூஸில் உரோமரது முற்றுகையை எதிர்க்கக் கண்டுபிடித்த பலவகை இயந்திரங்கள் 'யவனப் பொறிகள்' என்ற பெயரில் தமிழ்நாட்டுத் தலைநகரங்களின் கோட்டைகளில் பாதுகாப்பிற்காக அமைக்கப்பட்ட இவையனைத்தும் யவனர் தமிழகத்தோடு கொண்ட வணிக, நாகரிக உறவினை வலியுறுத்துவனவாம்.

இனி, இச் செய்திகளுக்கான தமிழ் இலக்கியச் சான்றுகளைக் காண்போம்.

முதலாவதாக, யவனர் தமிழ் அரசர்தம் மாளிகையில் வாயிற்காப்பாளராக விளங்கினர் என்பதனை முல்லைப் பாட்டு கொண்டு அறியலாம். குதிரையை அடிக்கின்ற சம்மட்டி வளைந்து கிடக்கின்ற உடையினையும், அச்சம்மட்டி மறையும்படி வடிம்பு தாழ்ந்து பெருக்குஞ் செறிதலையுடைய சட்டையினையும் அணிந்து பார்வைக்கு அச்சம் தருவோராய்—இயல்பான வலி கூடிய உடம்பினையுடையராய்—யவனர் தோற்றமளிக்கின்றனர். புலிச் சங்கிலி விடப்பட்ட அழகிய சிறந்த அரச மாளிகையினை அவர்கள் காத்து நிற்கின்றனர்.

**மத்திகை வளைஇய மறிந்து வீங்கு செறிவுடை**
**மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து**

**வலிபுணர் யாக்கை வண்கண் யவனர்**
**புலித்தொடர் விட்ட புனைமாண் நல்லில்**

—முல்லைப்பாட்டு : *59—62*

மேலும் சிலப்பதிகாரத்தில்

**கடிமதில் வாயில் காவலிற் சிறந்த**
**அடல்வாள் யவனர்.......**

—சிலப்பதிகாரம் *14 : 66—67*

என வரும் குறிப்பும் சான்று பகரும்.

இந்த யவனர்கள் கைத்தொழில் ஆற்றல் மிக்கவர்கள். இவர்கள் அன்ன விளக்கினையும் ((Swan-Shaped), பாவை விளக்கினையும் (Woman-Shaped) தமிழகத்திற்குத் தந்தார்கள். இதனை,

**கேள்வி யந்தணர் அருங்கடன் இறுத்த**
**வேள்வித் தூணத் தசைஇ யவனர்**
**ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட**
**வைகுறு மீனிற் பையத் தோன்றும்**

—பெரும்பாண் : *315—318*

என்று பெரும்பாணாற்றுப்படையும்,

**யவனர் இயற்றிய வினைமாண் பாவை**
**கையேந் தையகல் நிறையநெய் சொரிந்து**
**பருஉத்திரி கொளீஇய குரூ உத்தலை நிமிரெரி**
**அறுவறு காலைதோறும் அமைவரப் பண்ணி**
**பல்வேறு பள்ளிதோறும் பாயிருள் நீங்க**

—நெடுநல்வாடை : *101—105*

என்று நெடுநல்வாடையும்,

**வேண்டிடந் தோறும் தூண்டுதிரிக் கொளிஇக்**
**கைவயிற் கொண்ட நெய்யகல் சொரியும்**
**யவனப் பாவை யணிவிளக் கழல**

—பெருங்கதை : *1: 47 : 173—175*

என்று பெருங்கதையும் குறிப்பிடுகின்றன.

யவனர்கள் வலிமிக்கவர்கள் என்றும், தேறல் மாந்தி மகிழ்சிறந்து, பொழியும் மழைத்துளியினையும் பொருட்படுத்தாது மதுரை நகர வீதிகளில் திரிந்தனர் என்றும் நெடுநல்வாடை மேலும் குறிப்பிடுகின்றது,

**மாடம் ஓங்கிய மல்லல் மூதூர்**
**யாறு கிடந்தன்ன அகன்நெடுந் தெருவில்**
**படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோள்**
**முடலை யாக்கை முழுவலி மாக்கள்**
**வண்டுமூசு தேறல் மாந்தி மகிழ்சிறந்து**
**துவலைத் தண்டுளி பேணார் பகலிறந்து**
**இருகோட் டறுவையர் வேண்டுவயின் திரிவர**

—நெடுநல்வாடை ; 29—35

யவனர்கள் சேரநாட்டுத் துறைமுகப்பட்டினமாய் விளங்கிய முசிறித் துறைமுகத்திற்குக் கப்பல்களில்வந்தனர். அவர்களுக்கு மிகவும் பிடித்தமான மிளகினைக் கப்பல் கப்பலாக வாங்கிச் சென்றனர்;. 'யவனப் பிரியம்' என்றே மிளகிற்குப் பெயரிட்டனர்; அதற்கீடாகப் பொன் தந்து சென்றனர்.

**.........சேரலர்**
**சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க**
**யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளங்கெழு முசிறி**

—அகநானூறு : 149 : 7—11

இவ்வாறு அகநானூறு குறிப்பிடுகின்றது. கலங்களில் வந்த பொன்னை மூங்கில் தெப்பத்தின் உதவியால் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்து, மலைபடு பொருளினையும், கடற்படு பொருளினையும் சேரன் வருநர்க்கு வாரி வழங்கியதாகப் புறநானூற்றுப் பாடல் ஒன்றில், வரலாற்றுச் செய்தியினைத் தம் பாடலில் தவறாது

வைத்துப் பாடியே வழக்கப்பட்டுப்போன பரணர் பாடியுள்ளார்.

**கலந்தந்த பொற்பரிசம்**
**கழித்தோணியாற் கரைசேர்க்குந்து**
**மலைத்தாரமுங் கடற்றாரமும்**
**தலைப்பெய்து வருநர்க்கீயும்**
**புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்.**

—புறநானூறு : 343 : 5—9

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன் மாறனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடும் புறப்பாடல் ஒன்று கொண்டு, யவனர் மதுச் சாடிகளைக் கொணர்ந்து தமிழ் மன்னர்களுக்குத் தந்த தனையும், அதனைப் பொற்கலத்தில் அழகு மகளிர் அவர் களுக்கு நாள்தோறும் தர அவர்கள் அதனைக் குடித்து மகிழ்ந்தனர் என்ற செய்தியினையும் அறிகிறோம்.

**யவனர், நன்கலம் தந்த தண்கமழ் தேறல்**
**பொன்செய் புனைகலத் தேந்தி நாளும்**
**ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து**
**ஆங்கினிது ஒழுகுமதி.**

—புறநானூறு : 56 : 18—21

மேலும் சிலப்பதிகாரம் கொண்டு மதுரைக்கோட்டை மதில்மீது, வளைந்து தானே எய்யும் எந்திரவில்லும், கரிய விரலையுடைய குரங்கு போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும், கல்லையுமிழும் கவணும், காய்ந்திறைத்தலாற் சேர்ந்தாரை வருத்துவதாய நெய்யும், செம்புருக்குமிடா வும், உருகக் காய்ச்சியெறிதற்கு எஃகுபட்டிருக்கும் உலை களும், இடங்கணிப்பொறிக்குக் கல்லிட்டு வைக்குங் கூடையும் முதலான இயந்திரப் பொறிகள் இருந்ததாக வும், இப்பொறிகள் யவனப் பொறிகள் என்றும் அறிய

வருகிறோம் (சிலம்பு: அடைக்கலக் காதை. 207—216) சிந்தாமணியிலும் இப்பொறிகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

இத்தகைய யவனர்களைப் பற்றிய குறிப்பு, சீவக சிந்தாமணியிலும் சில பாடல்களில் இடம் பெற்றுள்ளது. 'பொன் யவனப் பேழை' (114), 'எரிமணு செம்பொன் ஆர்ந்த ஈராயிரம் யவனப் பேழை' (557), 'மணியியல் யவனச் செப்பு' (1145 என்றெல்லாம் குறிப்புகள் வந்துள்ளன.

**மகத வினைஞரும் மராட்டக் கம்மரும்**
**அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்**
**தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடி**

—மணிமேகலை : 19: 107—109

என்று மணிமேகலையிலும்,

**யவனத் தச்சரும் அவந்திக் கொல்லரும்.**

—பெருங்கதை : 1 : 58—40

என்று பெருங்கதையிலும் யவனர்தம் கைவண்ணத்தால் பொலிவுறும் தொழில் நுட்பம் கூறப்பட்டுள்ளது.

இத்தகைய யவனர்களைப் போரில் அகப்படுத்திப் பிணித்து நெய்யைத் தலையில் ஊற்றி அவர்தம் கையைப் பின்னால் கட்டிப் பின் தண்டமாக அருவிலை நன்கலமும் வயிரமும் கொண்டான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்று பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தின் பதிகம் பகருகின்றது:

**நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து**
**நெய்தலைப் பெய்து கையிற் கொளீஇ**
**அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு.**

—2-ஆம் பத்துப் பதிகம் : 8—10

இதனைச் சிலப்பதிகாரம் நடுகற்காதையில் ஆசிரியர் இளங்கோவடிகள் 'வன்சொல் யவனர் வளநாடாண்டு பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினும்' (141—142) என்று கூறியுள்ளார். பின்னர் வாழ்த்துக் காதையின் ஊசல் வரியிலும்,

**வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கல்**
**தென்குமரி யாண்ட செருவிற் கயற்புலியான்**
**மன்பதைகாக் குங்கோமான் மன்னன் றிறம்பாடி**
**மின்செ யிடை நுடங்க வாடாமோ வூசல்**
**விறல்விற் பொறிபாடி யாடாமோ வூசல்**

என்று யவனரைச் சேரவேந்தர் போரில் வென்ற செய்தி யினைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

இதுகாறும் காட்டப்பெற்ற குறிப்புகள் யாவும் தமிழகத்தோடு யவனர் கொண்ட நாகரிக, வணிக உறவுகளை விளக்கமுறக் காட்டுவனவாகும். வரலாற்றுப் பெருமை சான்ற அத்தொன்னெடுங் காலத்திலேயே இவ்விரு இனத்தவர்களும் சிறக்க வாழ்ந்தனர் என்பதனைத் தமிழ் இலக்கியங்கள் இன்றும் எடுத்துக்காட்டி நிற்கின்றன.

# 3. காரும் தேரும்

தமிழர் தம் வாழ்வின் இருகண்கள் என மிளிர்ந்தவை காதலும் வீரமுமே. தமிழர் தம் வரலாறு பீடு மிக்கது; பெருமை சான்றது. உலகின் பிற பகுதி மக்கள் நாகரிகம் என்பதனையே அறியாது விலங்குகள்போல் இங்கும் அங்கும் வாழ்க்கையை நாடித் தேடி ஓடியபோது தமிழர் நாகரித்தின் சிறப்பிலே நிலையான—அமைதியான வாழ்வு நடாத்தியவர்கள் ஆவர். அவர்கள் வாழ்வு செல்வவளம் பெற்றுச் சீரும் சிறப்புமாகத் துலங்கியது.

அகமும் புறமும் தமிழ் இலக்கியத்தின் சிறப்பியல்புகள் ஆகும். காதலும் வீரமுமே மக்கட் சமுதாயத்தின் இரு பெரும் பண்புகளாக இன்றும் துலங்கக் காணலாம். அகமாவது: ''ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங்கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம். அக் கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலவனாக இவ்வாறிருந்ததெனக் கூறப் படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார்'' என்று உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியர் தம் பொருளதிகார உரையில் புலப்படுத்தி யுள்ளார். தொல்காப்பியனார் தமிழ் கூறு நல்லுலகினை ஐந்து வகையாகப் பகுத்துக் காண்பர். காடும் காடு சார்ந்த இடமும் முல்லை என்றும், மலையும் மலையைச் சார்ந்த இடமும் குறிஞ்சி என்றும்.

வயலும் வயலைச் சார்ந்த இடமும் மருதம் என்றும், கடலும் கடலைச் சார்ந்த இடமும் நெய்தல் என்றும், முல்லை நிலமும் மழையின்மை காரணமாக வளம் குறைந்து தம் நல்ல தன்மை கெட்டால் அவ்வளம் குறைந்த பகுதி பாலை என்றும் அழைக்கப்பட்டன. ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய பெரும் பொழுதுகள் அடுத்து எண்ணப் பெற்றன. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்ற ஆறு பெரும் பொழுதுகளையும், வைகறை, காலை, நண் பகல், எற்படுகாலை, மாலை, யாமம் என்ற ஆறு சிறு பொழுதுகளையும் தொல்காப்பியனார் குறிப்பர். நிலமும் பொழுதும் முதற் பொருள்களாகவும், அந்நிலத்துத் தெய்வம் மக்கள், பறவை, விலங்கு, மரம், நீர், பறவை, உணவு முதலியன பிற, கருப்பொருள்களாகவும், புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல். இவற்றின் நிமித்தங்கள் அவ்வத்திணைகளுக்குரிய உரிப்பொருள்களாகவும் கொள்ளப் பெற்றன. இவற்றைப் பொதுவாக 'அன்பின் ஐந்திணை' என்பர்.

இது போன்ற இவ் ஐந்து அகவொழுக்கங்களுக்கும் புறனாக ஐந்து புறவொழுக்கங்கள் பேசப்பட்டன. தமிழர் தம் வீரம் ஆற்றல் சான்றது; புகழுக்குரியது; கடல் கடந்தும் சென்று விளங்கியது. எனவேதான் தமிழ் வீரக்குடியின் தொன்மையினைப் பேசவந்த சேரன் ஐயனாரிதனார் 'கல் தோன்றி மண்தோன்றாக் காலத்தே, வாளோடு முன் தோன்றி மூத்த குடி' என்று குறிப்பிட்டார். குறிஞ்சி என்னும் அக வொழுக்கத்திற்குப் புறனான புறவொழுக்கம் வெட்சி என்றும், முல்லைத் திணைக்குப் புறனான புற வொழுக்கம் வஞ்சி என்றும், மருதத்திணைக்குப்புறனான புறவொழுக்கம் உழிஞை என்றும், நெய்தல் திணைக்குப் புறனான புறவொழுக்கம் தும்பை என்றும், பாலைத் திணைக்குப் புறனான புறவொழுக்கம் வாகை என்றும் பொருத்தமுறக் கிளந்து கூறப்பட்டன.

காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலம் என வழங்கும். இயற்கையின் இனிய சூழலில் மக்கள் இயற்கையோடு இயற்கையாகக் கைகோத்து இனிய எளிய வாழ்வு வாழ வகை செய்யும் இடம் முல்லை நிலமேயாகும். நாகரிக வளர்ச்சிக்கு இடமளிப்பது இத்தகு நிலமே என்பர் அறிஞர். இயற்கையைத் தன் வாழ்விற்குத் துணையாக மனிதன் கொள்ளுமிடம் முல்லை நிலமேயாம். பிறநிலங்களில் மனிதன் இயற்கையை நம்பியோ, அல்லது எதிர்த்தோ, அல்லது வென்றோ வாழ வேண்டியிருந்தது. ஆனால் முல்லையில் அந்தத் தொல்லை இல்லை. அங்கு வாழ்க்கை, துன்பத்தைத் தோற்றுவிப்பதாக இல்லாமல் இன்பத்தை ஏற்றுவிப்பதாக இருந்தது. எனவே கவலை குறைந்த, பொழுது போக்கான வாழ்க்கையினை இயற்கை இனிதே வழங்கும் இடம் காடும் காட்டைச் சேர்ந்த கவினுறு முல்லை நிலமே என்று உறுதியாக மொழியலாம்.

முல்லை நிலத்தில்தான் மக்கள் ஒருவரோடு ஒருவர் இணைந்து சமுதாயமாக வாழும் நாகரிக வாழ்வு முகிழ்த்தது எனலாம். ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு இணக்கமாக— இனமாக வாழும் இனிய சூழல் முல்லை நிலத்திலேயே அமைகின்றது. எனவே தமிழர் தம் சமுதாய வரலாறு முல்லையில் முகிழ்த்துப் பின் மருதத்தில் முற்று நவம் கொள்கின்றது எனலாம். முல்லை நிலத்தில் வாழ்வோர் ஆயரும் ஆய்ச்சியரும் ஆவர். கண்ணபிரானின் கவின் நிறைந்த மகிழ்ச்சிப் பெருவாழ்வு துலங்கியது ஆயர்பாடியிலே அன்றோ? தொல்காப்பியனாரும் 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்று முல்லை நிலத்திற்குத் தெய்வமாக மாயோனையே குறிப்பிட்டுள்ளார். ஆயர்தம் வாழ்வு பெரும்பகுதியும் ஆடுமாடுகளை மேய்ப்பதிலேயே கழிகின்றது. எனவேதான் பசுக்களை மேய்ப்பதற்கு உதவும் ஆயன் கைக்கோலே நாடு காக்கும் தலைவனாம் அரசனின் ஆட்சிக்கு உரிய செங்கோலாகப் பின்னர் அமைந்தது. குடிமக்களைக் காக்கும் செங்கோல் ஆயன் பசுக்களைக் காத்தோம்பிய கைக்கோலிலேயிருந்து பிறந்ததாகும். பசுக்களுக்குத் தமிழர்

சமுதாயத்தில் சிறந்த மதிப்புத் தரப் பெற்றிருந்தது. வள்ளுவப் பெருந்தகையும் கோல் செம்மைகோடினால்,

**ஆப்பயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
**காவலன் காவான் எனின்**

—திருக்குறள் : 560

என்று செங்கோன்மைக்கும் பசு நன்கு பாதுகாக்கப் படுவதற்கும் உரிய தொடர்பைச் சுட்டிக் காட்டினார். 'மாடு' என்ற சொல்லிற்கே 'செல்வம்' என்பது பொருளாகும். இதிலிருந்து நாகரிகத்தின் தொடக்கக் காலத்தில் மக்களின் செல்வமாக விளங்கியவை மாடுகளே எனலாம். எனவேதான் புறப்பொருளின் தொடக்கமும் பகைவர் நாட்டுப் பசுக்களைக் கவர்ந்து வந்துவிடும் வெட்சியாகவே அமைந்தது.

'காரும் மாலையும் முல்லை' என்று தொல்காப்பியனாரும், 'மல்குகார் மாலை முல்லைக்குரிய' என்று நம்பி அகப் பொருள்காரரும் குறிப்பிட்டனர். இயற்கை யன்னை இனிய கொலு வீற்றிருக்கும் காலம் கார் காலமாகும். அக்காலத்தில்தான் பருவ மழை பொழிந்து காடெல்லாம் பூத்துக் கவினுற விளங்கும்; காட்டு மரங்கள் எல்லாம் கார் கால மழையால் தழைத்து, செடி, கொடிகள் எல்லாம் கண்ணுக்கும் கருத்துக்கும் மகிழ்வூட்டும் பூக்களைப் பூத்துச் செழித்துக் குலுங்கும் கண் நிறைந்த கவினார் காலமாகும். கார் காலமான ஆவணி, புரட்டாசியின் மாதக் காலத்திலே மணம் நிறைந்த முல்லை மணக்கத் தொடங்குகின்றது; புதுப்பெயல் கண்ட பூரிப்பிலே பூத்துக் குலுங்குகின்றது; புதர்களிலே மண்டிக் கிடக்கும் பல்வகைப் போதுகளும் மலர்ந்து மட்டற்ற மணத்தைக் கமழ்விக்கும் காட்சிக் கினிய காலம் கார் காலத்து மாலைக் காலமாகும். முல்லை மலர்கள் மணம் கவரும் வெண்மையும் தூய்மையும் அழகும் இனிமையும், மணமும் நிறைந்த மலர்களாகும். எனவே

முல்லை நிலத்தின் இனிய காதலர்களின் இன்ப வாழ்விற்குத் தூய்மையான முல்லை மலர் அடையாளப் பூவாக அமைந் தது; முல்லை என்ற சொல்லிற்கே 'கற்பு' என்ற பொருளும் உண்டு எனும் அளவிற்குக் கற்புக்கு அடையாள மான மலராகத் துலங்கிப் பெருவாழ்வு பெற்றது.

முல்லை நிலத்தில் வீரத்திற்கும் வேண்டிய இடம் உண்டு. கார் காலத்தில் பயிர்த் தொழில் தொடங்கு கின்றது; முன்பனிக் காலத்தின் இடையில் அது முற்றுப் பெறுகின்றது. மார்கழித் திங்களின் இறுதியில் அறுவடை முதலியன வெல்லாம் முடிந்து, தைத் திங்கள் தொடக்கத் தில் களஞ்சியம் நிறைந்துவிடுகிறது. இனி, உழவுக் கலப்பை களுக்குச் சில திங்கள் வேலை இல்லை. உழைத்த கரங்கள் சிறிது ஓய்வு பெறலாம். இத்தகு நேரங்களில் இளைஞர் தம் நெஞ்சங்கள் காதலியர் உவக்கும் வீர விளையாட்டு களில் செல்கின்றன. நாட்டைக் காக்கும் போர் தொடங்கி னாலும் வீர இளைஞர்கள் தம் காதலியரிடம் விடை பெற்றுக் களிப்போடு களம் நோக்கி ஏறுநடை போட்டுப் பீடுடன் சென்று களம் கொண்டு, வாகை சூடித் திரும்பினர். போர்மேற் செல்லும் கணவர் தம் மனைவியரிடம் கார்காலத் தொடக்கத்தில் —ஆவணி மாதத் தொடக்கத்தில் உறுதியாகத் திரும்பி வந்துவிடுவதாகச் சொல்லிச் செல்லல் மரபாகும். கணவன் சொல்லைத் தேறி, கணவன் வருகையை நம்பிக்கையோடு எதிர்நோக்கி, அவன் கூறிச் சென்ற பருவம் வருமளவும் இல்லறக் கடமைகளை ஓம்பி வருதல் கற்புடை மனைவியின் கடப்பாடாகும். இவ்வாறு இல்லாள் இல்லில் ஆற்றியிருத்தலையே 'இல்லிருத்தல் முல்லை' என்றனர். கணவனும் தான் கூறிய சொல் பிறழாமல் கார்காலத் தொடக்கத்தில் திரும்பி வருவான். மனைவியும் கற்பு நெறி வழுவாது கணவன் சொல் தேறி, வீட்டில் ஆற்றியிருப்பாள். 'கற்பு' என்ற சொல்லிற்குக் கல் போன்ற திண்மை நிலை என்றும், இல்வாழ்விற்கு இயைந்தன கற்றுத் தெளிந்து, கற்ற நெறியே கடை

புணர்வுடன் நிற்றல் என்றும் ஆன்றோர் பொருள் கூறுவர். அறிவிற் சிறந்த ஔவைபிராட்டியார், 'கற்பெனப் படுவது சொல் திறம்பாமை' எனப் பொருட் பொருத்த முறக் குறிப்பிட்டுள்ளமை ஈண்டு நினைத்தற் குரியது.

பெரும்பாலான முல்லைத் திணைப் பாடல்கள் மனைவி, கணவன் வரவை எதிர்நோக்கி நம்பிக்கையுடன் ஆற்றியிருக்கும் ஒழுக்கம் பற்றி எழுந்தனவேயாகும். இதற்குச் சான்றுகளாகச் சில காட்சிகளைக் காண்போம்.

முல்லை நிலத்தில் பெருமழை பெய்தது. மண்ணில் வரிவரியாகக் கீறிவிட்டு நீரோட்டம் சென்றது. ஈர மணலைக் காட்டுக் கோழிகள் தம் காலால் கிளறிச் சிதறச் செய்தன. பசுக்களின் கூட்டத்திற்குத் தலைமை தாங்கி வழி நடத்திச் செல்லும் காளை, பாம்புப் புற்றின் ஈரமான மேற்புறத்தினைத் தன் கூறிய கொம்புகளினால் குத்திக் கிளறுகின்றது. மண் பட்ட கொம்புகளோடு தன்னை விரும்பிய இளைய பசுவுடன் சேர்ந்து செம்மாந்த நடையுடன் வீடு திரும்பி வரும் மாலைப் பொழுதில் மற்றப் பசுக்களும் தம் தம் கன்றுகளை அன்போடு அழைத்து, தம் மன்றம் புகுகின்றன. அது பொழுது பசுக்களின் கழுத்தில் கட்டப் பெற்றிருக்கும் மணிகள் அழகுற ஒலிக்கின்றன. அவ்வொலி இனிய இசையாகி எங்கும் பரவுகின்றது. இக்காட்சியினை அழகுறு பாட்டாக அகநானூற்றுப் புலவர் வெள்ளைக் கண்ணத்தனார் சித்திரித்துள்ளார். அப்பாடலின் பகுதி வருமாறு :

**கடுநீர் வரித்த செந்நில மருங்கின்
விடுநெறி ஈர்மணல் வாரணம் சிதரப்
பாம்புறை புற்றத்து ஈர்ம்புறம் குத்தி
மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு
உடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ
ஊர்வயின் பெயரும் பொழுதின் சேர்புடன்**

**கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரும்**
**ஆபூண் தெண்மணி ஐதியம்பு இன்னிசை.**

*—அகநானூறு : 64 : 8—11*

கார் காலத்தின் தொடக்கத்தில் இரவு முழுவதும் பெரு மழை பெய்தது. உழவர்கள் நன்கு காலைப்பொழுது புலர்ந்தவுடனே தத்தம் நிலங்களுக்குச் சென்று ஏர் பூட்டி உழுதனர். செம்மண் பூமியின் புழுதி மேலும் கீழும் சென்றிடுமாறு உழுதொழில் செய்தனர். பின்னர் வரகு விதைத்தனர்; விதைகள் முளைத்து மேலே தெரிந்தன. உழவர்கள் ஓலைக்குடையைத் தம் தலைமேற் பிடித்துத் தொழிலாற்றிய தோற்றம், கலைமான் கூட்டம் நிலமெல் லாம் பரந்து திரிந்த காட்சி போலக் காணப்பட்டது, பறை முழங்க, உழவர்கள் பயிர்களில் முளைந்திருந்த களையைப் பக்குவமாகக் களைந்தெறிந்தார்கள். களை கட்ட பின் வரகு மேலும் செழித்து வளர்ந்து விட்டது. கதிர்கள் இரண்டிரண்டாகப் பிளவுபட்டாற் போன்று காட்சி வழங்கின. அக் கதிர்களை மயில்கள் உண்டு, பின் தம் நீல நிறத் தோகைகளைப் பரப்பிக் குருந்த மரக்கிளைகளில் கொலுவீற்றிருந்தன. அக் கிளைகளிலிருந்து மகிழ்ச்சியோடு அவை அகவிய ஒலி, கிளி கடியும் பெண்களின் குரல் ஒலி போல் இருந்தது. அத்தகைய கார்காலம் இது என்று பிறி தோர் அகநானூற்றுப் புலவர் இடைக்காடனார் அழகுற, நயம்பட வருணித்துள்ளார் :

**பேருறை தலைஇய பெரும்புலர் வைகறை**
**ஏர் இடம் படுத்த இருமறுப் பூழிப்**
**புறமாறு பெற்ற பூவல் ஈரத்து**
**ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்**
**வித்திய மருங்கின் விதைபல நாறி**
**இரலை நன் மான் இனம் பரந்தவை போல்**
**கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்**
**கறங்குபறைச் சீரின் இரங்க வாங்கிக்**

**களைகால் கழீஇய பெரும்புன வரகின்**
**கவைக்கதிர் இரும்புறம் கதூஉ உண்ட**
**குடுமி நெற்றி நெடுமாத் தோகை**
**காமர் கலவம் பரப்பி ஏமுறக்**
**கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த**
**வல்லிலைக் குருந்தின் வாங்குசினை இருந்து**
**கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும்**
**கார்மன் இதுவால்...!**

—*அகநானூறு : 194 : 1—16*

முல்லை நிலம் கார்காலத்தில் கவினுற விளங்கிக் காட்சி ஒளிப்படம் வழங்குகின்றது. செறிந்த இலைகளையுடைய காயாமரம் அஞ்சனம் போன்ற நீல நிற மலர்களையும், இளந்தளிர்களைக் கொத்துக் கொத்தாக இட்டுத் தோன்றும் கொன்றை மரம் நல்ல பொற்காசு போன்ற மலர்களையும், வெண் காந்தளின் குவிந்த முகைகள் அழகிய கைகள் போன்று மலர்ந்த மலர்களையும், இதழ் நிறைந்த தோன்றி குருதி போன்ற செந்நிற மலர்களையும் மலர்வித்து மணம் பரப்பி நிற்கின்றன. இப் பூக்கள் பூத்துக் குலுங்குவதால் செம்மண் பூமி பொலிவுற்றுக் காணப்படுகிறது.

**செறியிலைக் காயா அஞ்சனம் மலர**
**முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்**
**கோடல் குவிமுகை அங்கை அவிழத்**
**தோடார் தோன்றி குருதி பூப்பக்**
**கானம் நந்திய செந்நிலப் பெருவழி.**

—*முல்லைப் பாட்டு : 93-97*

இவ்வாறு நப்பூதனார் என்னும் புலவர் முல்லை நிலத்தினை நயமுறக் கிளத்துகின்றார்.

கார்காலத்தின் தொடக்கத்தில் திரும்பி வருவேன் என்று கூறிச் சென்ற தலைவன் இன்னும் வரவில்லை. கார்

காலமோ வந்து விட்டது. கார்கால முதல் மழையால் முல்லைக் கொடி பூத்துக் குலுங்குகின்றது. அவ்வரும்புகள் கார்காலத்தின் வெண்ணிறப் பற்கள் போலவும், கார்காலம் அப் பற்களைக் காட்டித் தலைவியைப் பார்த்து நகைப்பது போலவும் தோன்றுவதாக ஒக்கூர் மாசாத்தியார் என்னும் பெண்பாற் புலவர் ஒரு பெண்ணின் ஆழ்ந்த மனத் துயரினைப் புலப்படுத்தியுள்ளார்.

**பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்**
**தொகுமுகை இலங்கெயி றாக**
**நகுமே தோழி நறுந்தண் காரே.**

—குறுந்தொகை : 126 : 3-5

பிறிதொரு தலைவி, அம்முல்லைக் கொடியினை வாழ்த்தி, அதனை நோக்கி இரக்கத்துடன், சோர்வுடன் பின்வருமாறு வினவுகின்றாள்:

''உன் சிறு சிறு வெண்ணிற அரும்புகளால் என்னைப் பார்த்து எள்ளி நகையாடுவதுபோல் புன்முறுவல் காட்டு கின்றாய். கணவனைப் பிரிந்து தனித்துறையும் மகளிராம் எம்போன்றோரிடம் நீ இவ்வாறு செய்வதும் தகுமோ?'' என்று கழிவிரக்கத்தோடு மெலிந்து வினவுகின்றாள்:

**முல்லை வாழியோ முல்லை நீநின்**
**சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை**
**நகுவை போலக் காட்டல்**
**தகுமோ மற்றிது தமியோர் மாட்டே.**

—குறுந்தொகை : 162

கார்காலத்தில் தலைவி மிகவும் ஆவலோடு எதிர் பார்ப்பது தலைவன் திரும்பி வரும் தேரோசையினையே ஆகும். ''பருவ மழை பெய்துவிட்டது; மயில்கள் மகிழ்ந்து ஆடுகின்றன; கொன்றை மலர்ந்து குலுங்குகின்றது. கார்

காலம் வந்து விட்டது. காலையில் நிலத்தில் விதைக்கச் சென்ற உழவர் முல்லைப்போதுகளோடு திரும்புகின்றனர்! ஆயினும் தலைவன் சென்ற தேர் திரும்பி வருகின்றது என்று என்னிடம் சொல்வார் இல்லையே'' என்று நலிந்து வருந்து கின்றாள் தலைவி.

**முதைப்புனம் கொன்ற ஆர்கலி உழவர்**
**விதைக்குறு வட்டி போதொடு பொதுளப்**
**பொழுதோ தான்வந் தன்றே மெழுகான்று**
**ஊதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி**
**மரம்பயில் இறும்பின் ஆர்ப்பச் சுரனிழிபு**
**மாலை நனிவிருந் தயர்மார்**
**தேர்வரும் என்னும் உரைவா ராதே.**

—குறுந்தொகை : 155

தலைவியின் ஆருயிர்த் தோழி அவளைத் தேற்றுகின் றாள். ''முல்லைப் பூக்கள் மலர்ந்தது பருவ மழையினால் அன்று; வம்ப மாரி—அதாவது புது மழையினாலாகும். இது உண்மையில் கார் காலமானால் நம் தலைவர் தவறாது வந்திருப்பார். அவர் வராமையினாலேயே இது கார் காலம் அன்று என்பதனை நீ உணரவில்லையா?'' என்கிறாள்:

**தண்டுளிக் கேற்ற பைங்கொடி முல்லை**
**முகைதலை திறந்த நாற்றம் புதல்மிசைப்**
**பூவமல் தளவமொடு தேங்கமழ்பு கஞல**
**வம்பு பெய்யுமால் மழையே வம்பு அன்று**
**கார்இது பருவம் ஆயின்**
**வாரா ரோஎம் காத லோரே?**

—குறுந்தொகை : 382

இது கேட்டு, ''பொற்காசுகளைப் போல் கொன்றை மலர்ந்துள்ளதையும், குருந்த மலர்கள் மலர்ந்து அசைவதை யும், குளிர்ந்த காற்று வீசும் நிலையினையும் கண்டும் கார்

காலம் அன்று இது என்றால் நான் காண்பவை எல்லாம் கனவுதானோ என்று உன்னை வினவத் தோன்றுகிறது'' என்றாள் தலைவி.

**காசின் அன்ன போதுஈன் கொன்றை**
**குருந்தொடி அலம்வரும் பெருந்தண் காலையும்**
**கார் அன்று என்றி யாயின்**
**கனவோ மற்றிது வினவுவல் யானே.**

—குறுந்தொகை : 148: 3-6

இவ்வாறு தலைவி தோழியிடம் கூறினும், தலைவன் தன்னிடம் சொன்ன சொல் பிறழாமல் உறுதியாக மீண்டும் திரும்பி வருவான் என்று நம்புகின்றாள்.

**அம்ம வாழி தோழி காதலர்**
**நிலம்புடை பெயர்வ தாயினும் கூறிய**
**சொல்புடை பெயர்தலோ இலரே.**

—நற்றிணை : 289 : 1-3

தலைவியின் நம்பிக்கையின்படியே தலைவனும் தேர் ஏறி வீடு நோக்கி விரைந்து வருகின்றான். வரும் வழியில் ஆணும் பெண்ணுமாய் விலங்குகளும் பறவைகளும் கூடி வாழும் அன்பான காட்சியினைக் காணுகின்றான். இரலை ஆண்மான் ஒன்று தன் துணைவியையும் குட்டியையும் அன்புக் குரலால் கூவி அழைக்கின்றது. அம் மானைத் தன் பாகனுக்குக் காட்டி, 'வல்விரைந்து செல்க பாகநின் தேரே' என்கிறான். தன் தலைவியின் நிலையைக் கற்பனையில் காண்கிறான். ''தலைவர் இன்று வருவார் என்று சொல்'' என்று கிளியிடம் இல்லவர் அறிதல் அஞ்சி மழலை மொழி பேசுகின்றாள் நாணுடைத் தலைவி.

**செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி**
**இன்றுவரல் உரைமோ சென்றிசினோர் திறத்துஎன**

**இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லெண**
**மழலை இன்சொல் பயிற்றும்**
**நாணுடை அரிவை**

—அகநானூறு : 34 : 14-16

இவ்வாறு தலைவியின் அன்பு நெஞ்சம் எண்ணி விரைந்து வீடு திரும்பும் தலைவனைக் கண்டு வீட்டில் உள்ள எல்லோரும் மகிழ்கிறார்கள். ''மாலை நேரம்! மனைவி, முன்றிலில் குறிய கால்களையுடைய கட்டிலில் தலைவன் அருகே உள்ளாள். ஆண் குழந்தை தலைவன் மார்பின்மேல் ஏறி ஊர்ந்து விளையாடுகின்றான். பாணன் யாழிலிருந்து எழுப்பும் இன்னிசை பொருத்தமாக அமைந்து எல்லோர்க்கும் மகிழ்ச்சி தருகின்றது.''

**மாலை முன்றில் குறுங்காற் கட்டில்**
**மனையோள் துணைவி யாகப் புதல்வன்**
**மார்பின் ஊரும் மகிழ்நகை இன்பப்**
**பொழுதிற்கு ஒத்தன்று மன்னே**
**மென்பிணித்து அம்ம பாணனது யாழே.**

—ஐங்குறு நூறு : 410

இவ்வாறு சங்ககாலப் புலவர்கள் முல்லை நிலத்தினையும், தலைவியின் அன்பு நெஞ்சத்தினையும், தலைவனின் 'செய்வினை முடித்த செம்மல் உள்ளத்'தினையும் தம் அழியாத பாடல்களில் வடித்துத் தந்துள்ளார்கள். **கார்** கால மாலையில் தலைவனின் **தேர்** வரும் ஒலியே தலைவியின் நெஞ்சம் மகிழ்விக்கும் இன்னோசையாகும்.

# 4. மணிமேகலை உணர்த்தும் அறம்

பதிவெழு வறியாப் பழங்குடி மேம்பட்ட பொதுவறு சிறப்புடைய நகரம் காவிரிப்பூம் பட்டினமாகும். ஆங்கு உயர்ந்தோங்கு சிறப்பின் ஒரு தனிக்குடியாய் விளங்கியது ஏசாச் சிறப்பின் மாசாத்துவான்குடி. அவன் தன் அருமைந்தன் மண்தேய்த்த புகழினான்; மதிமுக மடவார் தம் ஆயத்துக் கொண்டேத்தும் செவ்வேள்; இவனே கோவலன் என்னும் பெயரிய வணிகப் பெருமகன். இவன், புகார் நகரின் பெருஞ் செல்வனான மாநாய்கனின் மகள் கண்ணகியை மணந்தான். சிலவாண்டுகள் இல்லறம் இனிதே நடந்தது. பின்னர் ஊழின் வயத்தால் கோவலன் வடுநீங்கு சிறப்புடைய தன் மனையகம் மறந்து ஆடல் பாடல் அனைத்தும் பயின்று அழகரசியாகவும், கலையரசியாகவும் விளங்கிய மாதவியின்பால் மனம் சென்று மயங்கித் தீராக் காதலால் கண்ணகியைத் துறந்தான். அந்தக் காதலின் பயனாய்த் தோன்றிய கனியே மணிமேகலை. கோவலன் முன்னோன் வணிகப் பொருள்களுடன் கடலிற் கலம் செலுத்த அப்பொழுது அக்கலத்திற்கு ஊறுபாடு ஏற்பட, தான் வழிபடும் கடவுளாம் மணிமேகலா தெய்வத்தை நினைக்க, அவ் ஊறுபாடு அகன்றது. எனவே கோவலன் இந் நிகழ்ச்சியை நினைவு கூர்ந்து, தனக்கும் மாதவிக்கும்

பிறந்த மகளுக்கு மணிமேகலை என்ற பெயர் சூட்டினான்.

மணிமேகலைக் காப்பியம் சிலப்பதிகாரக் கதையோடு தொடர்பு பெற்றது. 'மணிமேகலை மேல் உரைப் பொருள் முற்றிய சிலப்பதிகாரம் முற்றும்' என்ற சிலப்பதிகார இறுதி அடிகள் இதனை வலியுறுத்தும். மணிமேகலைக் காப்பியத்தின் தலைவி மணிமேகலை ஆவள். இக் காப்பியத்தினை இயற்றிய ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் ஆவர். தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் 'சீத்தலைச் சாத்தனாராற் செய்யப் பட்ட மணி மேகலை' என்று தம் உரையிற் குறிப்பிட்டுள்ளனர்.

சேரன் செங்குட்டுவனுக்குக் கண்ணகியின் வரலாற்றினையும் கற்புமேம்பாட்டினையும் எடுத்து மொழிந்தவர் இவரே. இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் இயற்றுவதற்கு வேட்கை விளைவித்தவரும் இவரே ஆவர். இவர் பெயர் சாத்தனார் என்றும் சீத்தலைச் சாத்தனார் என்றும் கூலவாணிகன் சாத்தனார் என்றும், மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் என்றும் வழங்கும். சிலப்பதிகாரப் பதிகம் இவரைத் 'தண்டமிழ்ச் சாத்தன்' (அடி 10) என உரைக்கும்; சிலப்பதிகாரக் காட்சிக் காதையில் இவர் 'தண்டமிழாசான் சாத்தன்' என்றும், 'நன்னூற் புலவன்' என்றும் சிறப்பிக்கப் பெற்றுள்ளார்.

திருக்குறளாசிரியர் திருவள்ளுவர் பெருமானிடத்து இவர் மதிப்பும் மரியாதையும் உடையவர். இதனை இவர்,

**தெய்வந் தொழா அள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை.**

—திருக்குறள் : 55

என்ற குறளினை அப்படியே,

**தெய்வம் தொழா அள் கொழுநற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்**
**பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்**

—மணி ; 22 : 59-61

என்று பெய்துள்ளார். மேலும், 'கேள்வியாற் கேட்கப் படாத செவி' என்ற குறட்பகுதியினை மனத்துட் கொண்டு 'கேள்வியாளரிற் றோட்ட, செவியை நீ யாகுவை' (17 : 134—135) என்று குறிப்பிட்டுள்ளார்.

முற்பகல் செய்தது பிற்பகல் விளையும் என்றபடி, இவர் ஊழ்வினையைச் சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளைப் போலவே உறுதியாக நம்பினார் என்பதனைச் சோழ மன்னன் மாவண்கிள்ளியின் மகன் உதயகுமரன் காஞ்சனன் என்னும் விஞ்சையனால் வெட்டுண்ட செய்தியினைக் கூறுமிடத்து,

**ஆங்கவன் தீவினை உருத்த தாகலின்**
**மதிமருள் வெண்குடை மன்ன னின்மகன்**
**உதய குமர னொழியா னாக** —மணி : 22: 193–195

என்றும்,

**மடையனை,**
**உடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை**
**நஞ்சுவிழி யரவின் நல்லுயிர் வாங்கி**
**விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே** —மணி : 23 : 82-85

என்றும் கூறுவதனால் நன்கறியலாம்.

இந்நூலாசிரியர் இயற்றிய மணிமேகலை என்னும் இந் நூல் 'மணிமேகலை துறவு' என்றும் வழங்கும் என்பது 'மணிமேகலை துறவு ஆறைம் பாட்டினுள் அறிய வைத் தனன்' என்ற பதிகத்தின் இறுதியடிகள் கொண்டு உணர லாம். இந்நூல் பௌத்த சமயச் சார்பினளாக மணிமேகலை

யின் வரலாற்றினை விரித்துரைப்பதால் பௌத்த சமயக் கொள்கைகளை நூலின் கண்-பரக்கக் காணலாம். பௌத்த தருமங்கள் பல இந்நூலிற் கிளத்தப்படுகின்றன. இனி மணிமேகலை உணர்த்தும் அறக்கருத்துகளைக் காண்போம்.

பெண் சிறந்தவளாகவும் தூயவளாகவும் இருந்தால் தான் இல்லத்தில் அமைதி நிலவும், மகிழ்ச்சி பூத்துக் குலுங்கும் என்பதனைச் சாத்தனார் நன்குணர்த்துகின்றார். இந்திர விழாவில் மணிமேகலை நாட்டியம் ஆடமாட்டாள் என்பதனை எடுத்துக் கூறும்பொழுது தன் மகள் மணிமேகலையைக் கற்புக்கரசி கண்ணகியின் மகள் என்றே மாதவி குறிப்பிடுகின்றாள். தன் மகள் மதுரை மாநகரைத் தீக்கிரையாக்கிய மாபெரும் பத்தினி கண்ணகியின் மகள் என்று மாதவி குறிப்பிடும் கூற்றில் ஒரு செருக்குக் காணப் படுகின்றது. இதனைப் பின்வரும் மணிமேகலையின் அடிகள் உணர்த்துகின்றன.

**காவலன் பேரூர் கனையெரி மூட்டிய**
**மாபெரும் பத்தினி மகண்மணி மேகலை**
**அருந்தவப் படுத்த லல்ல தியாவதும்**
**திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்.**

—மணிமேகலை : 2 : 54-57

இவ்வாறு கூறிப் பத்தினிப்பெண்டிரின் இயல்புகளை யும் எடுத்துரைக்கின்றாள். பத்தினிப் பெண்டிர் தங்கள் காதலர் இறந்தால் உலையிலூதும் துருத்தி மூக்கைப் போலவே அழலெழ வுயிர்த்து, நெருப்பு மூட்டி அதில் விழுந்து, தங்கள் ஆருயிரினை விட்டுவிடுவர். அந்நெருப்பு அவர்களுக்கு குளிர்ந்த நீருடைய குளம் போலத் தோன்றும். அவ்வாறு அவர்கள் இறக்கவில்லையென்றால் கைம்மை நோன்பு நோற்றுத் தங்கள் உடம்பை வருத்திக் கொள்வார் கள். இக் கைம்மை நோன்பினை சிலப்பதிகாரம்.

இன்புறு தங்கணவர் இடரெரி யகமூழ்கத்
துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல்

—சிலப்பதிகாரம்: 18: 34-35

என்று குறிப்பிடுகின்றது. கைம்மை நோன்பின் வருத்தத்தினைப் பூதப்பாண்டியன் பெருந்தேவி புறநானூற்றுப் பாடலொன்றில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

வெள்ளெட் சாத்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்றி வதியும்
உயவற் பெண்டிர்.

—புறநானூறு: 246: 7-10

எள்ளுப் புழுக்கையுடன், வெந்த வேளைக் கீரையை உண்டு பாயில்லாமல் தரையிற் படுத்துறங்கித் துன்புற்று வாழ வேண்டும் என்று இப்பாடற் பகுதி கைம்மை நோன்பின் துன்பத்தினை உணர்த்துகின்றது. இவ்வாறு துன்பப் படாமல், தம் அரும்பெறற் கணவரை எரியூட்டிய நெருப்பிலேயே மனைவியர் விழுந்து தமமுயிரை மாய்த்துக் கொள்வார்களேயானால் அத்தகைய பத்தினிப் பெண்களுக்கு அவ் ஈமத்தீயும் குளிர்பொய்கையபகத் தோன்றும் என மேலும் கூறுவர் பூதப்பாண்டியன் தேவி.

பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளிதழ் அவிந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே.

—புறநானூறு: 246: 13-15

பத்தினிப் பெண்டிரினும் மாறுபட்ட வாழ்க்கையுடைய பொதுப் பெண்டிரின் புன்மை வாழ்க்கையினைச் சித்திராபதியின் கூற்றால் சாத்தனார் பெற வைக்கின்றார். மணிமேகலை பிக்குணிக் கோலங்கொண்டு அமுதசுரபி யென்னும் அட்சயபதேத்திரமேந்தி உலகவறவியிற் சென்றாள்

என்பதனைக் கேட்ட மாதவியின் தாய் சித்திராபதி மனங் கலங்கி, மாழ்கி மயங்கி, மணிமேகலையைத் துறவுக் கோலத்தினின்றும் துறக்க வைப்பேன் என்றாள். பின் நாடகக் கணிகையரைப் பார்த்து, ''கோவலன் இறந்தது கேட்டு மாதவி தன் வாழ்வைத் துறந்து அறவண அடிகளிடம் அறவுரை கேட்டுத் தவமேற் கொண்டொழுகுதல் நகைக்கத் தக்கது: கணவனோடு இறக்கும் பத்தினிப் பெண்டிரின் மரபில் வரவில்லை அவள். பாணன் இறந்தபொழுது அவனுடன் இறவாத யாழைப் போல்வேம் யாம்; பூவின் மகரந்தத்தை உண்டு அது தீர்ந்தபின் அப் பூவினைத்துறக்கும் வண்டு போன்ற வாழ்வே பரத்தையர்க்கு ஒத்த வாழ்வு'' என்றும் விளங்க எடுத்துரைத்தாள்:

விதுப்புறு நெஞ்சினள் வெய்துயிர்த்துக் கலங்கித்
தீர்ப்பலிவ் வறமெனச் சித்திரா பதிதான்
கூத்தியன் மடந்தையர்க் கெல்லாங் கூறும்
கோவலன் இறத்தபின் கொடுந்துய ரெய்தி
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்து
நகுதக் கன்றே நன்னெடும் பேரூர்
இதுதக் கென்போர்க் கெள்ளுரை யாயது
காதலன் வீயக் கடுந்துய ரெய்திப்
போதல் செய்யா வுயிரோடு புலந்து
நளியிரும் பொய்கை யாடுநர் போல
முளியெரிப் புகூஉ முதுகுடிப் பிறந்த
பத்தினிப் பெண்டிர் அல்லேம் பலர்தம்
கைத்தூண் வாழ்க்கை கடவிய மன்றே
பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையில்
யாழினம் போலும் இயல்பினம் அன்றியும்
நறுந்தா துண்டு நயனில் காலை
வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்.

—மணிமேகலை: *18: 4-20*

இத்தகு நன்னோக்கம் சிதைத்த நயனற்ற பரத்தையர் கூட்டம் சமுதாயத்தைக் கெடுத்து வருகிறது என்பதனை நன்குணர்ந்தவர் சாத்தனார். எனவே பரத்தையொழிப்பினைச் சீர்திருத்தமாக நம்முன் காட்டுகின்றார்:

**கள்ளும் பொய்யும் காமமும் கொலையும்**
**உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை**
**தலைமையாக் கொண்ட நின் தலைமையில் வாழ்க்கை**
**புலமையென் றஞ்சிப் போந்த பூங்கொடி**

—*மணிமேகலை: 24: 77-80*

என்று பரத்தைத் தொழிலைப் பழித்தெறிந்த மணிமேகலை, சாத்தனாரால் பாரட்டப் பெறுகின்றாள். பொருட்பெண்டிர் பொய்மை முயக்கினைக் கண்டித்து வள்ளுவரும் பத்துக் குறட்பாக்களில் பாங்குற மொழிந்தார்.

அடுத்து, மணிமேகலை உணர்த்துகின்ற அறம் கள்ளுண்ணாமையாகும். மலர் வனம் புக்க காதையில் ஓர் உண்ணா நோன்பி, கொழுமடற் றெங்கின் விளைபூந் தேறலில் கொலையில்லை என்று கூறி, இம்மையும் மறுமையும் இறுதியில் இன்பமும் தருவது கள்ளே என வழிப்போவோரிடம் பேதுற்று மொழிகின்றான் என்று கள்ளுண்ணலின் புன்மையைப் புலப்படுத்துவர் சாத்தனார். நாகர்மலையை அடைந்த சாதுவன் கள்ளடு குழிசியும் கழிமுடை நாற்றமும் கொண்டு, பெண்டுடன் இருந்த குருமகனைக் கண்டு, பின்வருமாறு அறவுரை கூறித் திருத்தினான். கள்ளும், கொலையும் அறிவுடையோரால் கடியப்பட்டனவாகும் என்றான்:

**மயக்குங் கள்ளும் மன்னுயிர் கோறலும்**
**கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்.**

—*மணிமேகலை : 6: 84-85*

இதனோடு,

**இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**
**திருநீக்கப் பட்டார் தொடர்பு**

—திருக்குறள்: 920

என்னும் குறளை ஒப்பிட்டுக் காண்க:

காமவுணர்வின் ஆற்றலினைத் தவ மேற்கொண்டொழுகும் தன்மையினளாம் மணிமேகலையின் வாய்மொழி கொண்டே சாத்தனார் வற்புறுத்திக் கூறுகின்றார். உவவனத்தில் மணிமேகலை உள்ளாள் என்பதனை அறிந்த உதயகுமரன் தேரேறி உவவனம் நோக்கி விரைந்து வருகின்றான். இதனைத் தன் தோழி சுதமதியால் அறிந்த மணிமேகலை பளிக்கறைக்குள் ஒளிந்து கொண்டாள். ஆங்குப் போந்த உதயகுமரன் சுதமதியை நோக்கி மணிமேகலையின் இருப்பிடம் வினவுகின்றான். மணிமேகலை உதயகுமரன் குரல்கேட்டுக் காமவுணர்வு கொள்கிறாள். உதயகுமரனோ மணிமேகலையை இழித்துப் பேசிச் சித்திராபதியின் உதவியுடன் அவளை அடைவதாகக் கூறிச் செல்கிறான். அவளைப் பழித்துப் பேசுங்காலையில், மணிமேகலை கற்பற்றவள் என்றும், தவ உணர்வு அற்றவள் என்றும், பரத்தையர் குடிவந்தவள் என்றும் பலவாறு பழித்துக் கூறுகின்றான். அது கேட்டும் மணிமேகலையின் நெஞ்சம் அவனை வெறுக்காமல், மாறாக விரும்புகின்றது.

**கற்புத் தானிலள் நற்றவ வுணர்விலள்**
**வருணக் காப்பிலள் பொருள்விலை யாட்டியென்று**
**இகழ்ந்தன னாகி நயந்தோன் என்னாது**
**புதுவோன் பின்றைப் போனதென் நெஞ்சம்**
**இதுவோ அன்னாய் காமத் தியற்கை.**

—மணிமேகலை: 5 : 86-90

இவ்வாறு காமத்தின் வன்மையினை மணிமேகலைக் காப்பியம் தவமங்கையின் மனப்போராட்டத்தின் வழி உணர்த்துகின்றது.

மணிமேகலை உணர்த்தும் மற்றொரு சீரிய கருத்து, பற்றே துன்பங்கள் பலவற்றிற்கும் காரணம் என்பதாகும். பிறந்தவர் துன்பம் அடைவர் என்றும், பிறவாதவரே இன்பநிலை எய்த முடியும் என்றும் சாத்தனார் குறிப் பிடுகின்றார்.

**பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்**
**பிறவார் உறுவது பெரும்பேர் இன்பம்**
**பற்றின் வருவது முன்னது பின்னது**
**அற்றோர் உறுவது அறிக.** —மணிமேகலை : 2: 64-67

இவ்வடிகளோடு,

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேரா தார்** —திருக்குறள்: 10

என்ற குறளும்,

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு**

—திருக்குறள் : 350

என்ற குறளும் ஒப்பிட்டு நோக்கத் தக்கன.

மக்கள் வாழ்க்கையின் புன்மையினை நோக்கினால் அறநாட்டம் ஏற்படும் என்பது துணிபு. வினையால் உடம்பு தோன்றுகின்றது; வினைக்கு உடன்படுகின்றது. முதுமையும் நோயும் பற்றும் உடம்பினைக் குற்றேவல் கொள்கின்றன:

**வினையின் வந்தது வினைக்குவிளை வாயது**
**புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது**
**மூப்புவிளி வுடையது தீப்பிணி யிருக்கை**
**பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்**

..............................

**மக்கள் யாக்கை யிது.** —மணிமேகலை :4 : 113-121

இவ்வுலகில் பரமார்த்த தத்துவ ஞானிகள், கள், பொய், களவு, கொலை, காமம் ஆகிய ஐந்தினையும் நீக்குபவர்களையே நிறைதவமுடைய நெஞ்சினர் என்று கொள்வர் என்று சாத்தனார் விழுமிய வாழ்வு நெறியினை வற்புறுத்துகின்றார் :

**முடிபொருள் உணர்ந்தோர் முதுநீர் உலகில்**
**கடியப் பட்டன வைந்துள அவற்றில்**
**கள்ளும் பொய்யுங் களவுங் கொலையும்**
**தள்ளா தாகும் காமம் தம்பால்**
**ஆங்கது கடிந்தோர் அல்லவை கடிந்தோரென**
**நீங்கின ரன்றே நிறைதவ மாக்கள்**
**நீங்கா ரன்றே நீணில வேந்தே**
**தாங்கா நரகத் தன்னிடை யுழப்போர்.**

—மணிமேகலை : 22: 169-176

இளமை இவ்வுலகில் ஒருநாளும் நிற்பதில்லை; யாக்கைக்கு முடிவுண்டு, அறத்திற்கு அழிவில்லை. இக்கருத்தினை மணிமேகலை ஆசிரியர் பலவிடங்களில் வற்புறுத்துகின்றார் என்பதனை,

**பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட் டிரங்கலும்**
**இறத்தலு முடையது இடும்பைக் கொள்கலம்**
**மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து**
**மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்.**

—மணிமேகலை : 18 : 136-139

என்றும்,

**இளமையும் நில்லா யாக்கையும் நில்லா**
**வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா**
**புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்**
**மிக்க அறமே விழுத்துணை யாவது**

—மணிமேகலை 22: 135-139

என்றும் குறிப்பிடுவதனின்று அறியலாம்.

இதுபோன்றே உதயகுமரன் இறந்தது கேட்டு இராச மாதேவி பெருந் துயரங் கொள்கிறாள். அதனால் தன் மகன் வெட்டப்படுவதற்குக் காரணமாக இருந்த மணி மேகலையை வெறுக்கிறாள். அதன் விளைவாக அவளுக்குப் பல இடுக்கண்களைச் செய்கின்றாள். தவத்தின் பெற்றி யால் மணிமேகலையை அத்தீவினைகள் யாதும் புரிய வில்லை. மகன் இறந்த வருத்தத்தில் மூழ்கிக் கிடந்த இராசமாதேவியை மணிமேகலை கண்டு ''உதயகுமரனின் உடலுக்கு அழுகின்றனையா? அல்லது உயிருக்கு அழுகின் றனையா? உடல் பொருட்டு அழுவாயேயாயின் அவ்வுட லினைச் சுடுகாட்டிற்குக் கொண்டு சென்று எரித்தவர் யார்? உயிரின் பொருட்டு அழுவாயே யானால் அந்த உயிர் அழிந்துவிடவில்லை; வேறோர் உடலில் இப்பொழுது புகுந்துலவுகின்றது, எனவே உலகின் உயிர்களுக்கெல்லாம் இரங்கி அன்பு செய்தால் அவ்வுயிர்களில் ஒன்று உதய குமரனுடையதாக அமையலாம்'' என்று கூறி மணிமேகலை இராசமாதேவியைத் தெருட்டி அன்பு அருள் ஆகிய உயிர்ப் பண்புகளின் மேன்மையினை எடுத்துரைத்தாள் :

**உடற்கழு தனையோ உயிர்க்கழு தனையோ**
**உடற்கழு தனையேல் உன்மகன் தன்னை**
**எடுத்துப் புறங்காட்டு இட்டனர் யாரே**
**உயிர்க்கழு தனையேல் உயிர்புகும் புக்கில்**
**செயப்பாட்டு வினையால் தெளிந்துணர் வரியது**
**அவ்வுயிர்க் கன்பினை யாயின் ஆய்தொடி**
**எவ்வுயிர்க் காகினும் இரங்கல் வேண்டும்.**

—மணிமேகலை: 23: 73-79

இளமை அழியும் என்பதனை நரை மூதாட்டி ஒருத்தி யைக் காட்டி மணிமேகலை உதயகுமரனுக்கு உணர்த்தினள் என்று சாத்தனார் கூறுவர்.

மேலும்,

**உறங்குவது மேலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு** —திருக்குறள்: 339

என்று குறள் கூறும் கருத்தினையே சாத்தனாரும்,

**பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்**
**உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்**
**நல்லறஞ் செய்வோர் நல்லுலகு அடைதலும்**
**அல்லறஞ் செய்வோர் அருநரகு அடைதலும்**
—மணிமேகலை: 16; 86–89

என்ற அடிகளில் புலப்படுத்துகின்றார்.

இறுதியாக, மணிமேகலை உணர்த்தும் பேரறமாக எண்ணத்தக்கது பசிப்பிணி யொழியப் பாடுபட வேண்டும் என்னும் உயரிய கோட்பாடே யாகும். முதலாவது விழா வறை காதையிலேயே பசியும் நோயும் பகையும் நீங்கி வளமையும் வாழ்வும் தழைக்க வேண்டுமென நகர மக்கள் அணி விழா எடுக்கின்றனர்:

**பசியும் பிணியும் பகையும் நீங்கி**
**வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி.**
—மணிமேகலை: 1: 70-71

'உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும் சேரா தியல்வது நாடு' என்றார் வள்ளுவர். 'அற்றார் அழிபசி தீர்த்தல்' தலையாய அறமாகக் கருதப்படும். ''பசிப்பிணி வந்துற்றால் அது மேலாம் குடிப்பிறப்பினை அழிக்கும்; விருப்பத்தினை ஒழிக்கும்; கல்வியினைக் கைவிட வைக்கும்; நாணத்தை நீக்கும்; அழகை அலங்கோலமாக்கும்; மனைவியோடு பிறர் கடைவாயிலில் சென்றிரக்கச் செலுத்தும். அப் பசிப்பிணியினைத் தீர்த்தோர் பெருமை நாவால் சொல்லி இயலாது.'' இவ்வாறு பசிக்கொடுமையினைச் சாத்தனார் குறிப்பிட்டுள்ளார்.

**குடிப்பிறப் பழிக்கும் விழுப்பம் கொல்லும்**
**பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்**
**நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்**
**பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்**
**பசிப்பிணி யென்னும் பாவி; அது தீர்த்தோர்**
**இசைச்சொல் அளவைக் கென்நா நிமிராது.**

—மணிமேகலை: 11: 76-81

எனவே ஆற்றா மாக்களின் அரும்பசி களைந்து வாழும் மெய்ந்நெறி வாழ்க்கை உயர்ந்த வாழ்க்கையாகும்; உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் ஆவர்.

**மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே.**

—மணிமேகலை: 11: 95–96

பசிப்பிணி தீர்க்கும் இப் பேரறத்தினைச் சாத்தனார் 'அறவணர்த் தொழுத' காதையிலும் அறிவுறுத்தியுள்ளார். மக்கள் தேவர் ஆகிய இருபகுதியினர்க்கும் உயரிய அறமாக விளங்கும் ஒன்று பசிப்பிணி தீர்த்தல் என்ற ஒன்றேயாம் என்று வன்மையுடன் வற்புறுத்துகின்றார்:

**மக்கள் தேவர் எனவிரு சார்க்கும்**
**ஒத்த முடிவின் ஓரறம் உரைக்கேன்**
**பசிப்பிணி தீர்த்தல் என்றே அவரும்**
**தவப்பெரு நல்லறம் சாற்றினர்.**

—மணிமேகலை: 12: 116-119.

ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதையில் சாத்தனார் அறத்திற்கு இலக்கணமே (definition) கூறியுள்ளார். அறமெனப்படுவது உலக உயிர்களுக்கெல்லாம் உண்டி, உடை, உறையுள் முதலியவற்றைத் தருதலாகும் என்று நயமுற நவின்றுள்ளார்:

**அறனெனப் படுவது யாதெனக் கேட்பின்**
**மறவா திதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்**
**உண்டியும் உடையும் உறையுளும் அல்லது**
**கண்ட தில்லெனக் காவலன் உரைக்கும்**

—மணிமேகலை: 25: 228-231

தெள்ளு தமிழ்ப் புலவர் திருவள்ளுவரும்,

**பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்று ளெல்லாந் தலை.**

—திருக்குறள்: 322

என்றார்.

இவ்வாறு தண்டமிழாசான் சாத்தனார் தாமியற்றிய மணிமேகலைக் காப்பியத்தில் தலையாய அறங்கள் பலவற்றினை வற்புறுத்தியுள்ளார். அவற்றுள் கள், பொய், களவு, கொலை, காமம் ஆகிய ஐந்தினைக் கடிதல் வேண்டும் என்றும், இளமையும் யாக்கையும் செல்வமும் நிலையாமை யுடையன என்றும், பரத்தையர்தோள் தோய்தல் அடாது என்றும், எல்லா அறத்தினும் மேம்பட்டது பசிப்பிணி போக்குதலே என்றும் பொருந்தக் கூறியுள்ளார். மணிமேகலை உணர்த்தும் அறப் பண்புகள் நாட்டில் மிகுந்தால் நாடு வலிவும் வனப்பும் பெற்றுப் புதுப் பொலிவுடன் பீடுடன் பிறங்கும் என்பது ஒருதலை.

# 5. இலக்கியத்தில் தமிழ்நாடு

மரம் முந்தியதா? விதை முந்தியதா? என்ற ஆராய்ச்சி முற்றுப் பெறா ஒன்று. இது போன்று கவிதை முந்தியதா? உரைநடை முந்தியதா? என்கிற கேள்வியும் அது குறித்துக் கருத்து வேறுபாடும் உண்டு. ஆயினும் இலக்கியம் முந்தியதா! இலக்கணம் முந்தியதா என்ற கேள்விக்கு இடமேயில்லை. ஏனெனில் இலக்கியத்திலிருந்து இலக்கணம் எழுகின்றது என்பதனை நம் முன்னோர் அறுதியிட்டுக் குறிப்பிட்டுச் சென்றுள்ளனர்.

**எள்ளினின்று எண்ணெய் எடுபடுவது போல**
**இலக்கியத் தினின்றும் எடுபடுவது இலக்கணம்**

என்ற செய்யுள் இவ்வுண்மையினை நன்கு உணர்த்தும். தமிழில் இன்று கிடைக்கும் நூல்களில் மிகப் பழமையான நூல் தொல்காப்பியம் என்பது யாவரும் அறிந்த உண்மை. தொல்காப்பிய நூலாசிரியராம் தொல்காப்பியனார் தம் நூலின்கண் அவர் காலத்திற்கு முன்னர் நிலவிய இலக்கியத்திற்கு மரபு கூறுகின்றார்; இலக்கணம் கூறுகின்றார். 'இலக்கியங் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பலின்' உண்மை இதனால் நமக்குத் தெற்றெனப் புலனாகின்றது. மேலும் தொல்காப்பியனார்,

**நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**

—தொல்காப்பியம்: அகத்திணை இயல்: 53

என்று தமக்கு முற்பட்ட இலக்கிய மரபினைச் சுட்டிக் கூறியுள்ளார். ஆயினும் தொல்காப்பியத்திற்கு முன்னர் எழுந்த இலக்கியங்கள் இதுகாறும் நமக்குக் கிடைத்தில. இன்று நம்மிடையே இலங்கும் இலக்கியங்களில் காலத்தாலும் கருத்தாலும் கவினுறச் சிறந்து மிளிர்வன நம் தங்கத்தமிழில் எழுந்த பங்கமில்லாச் சங்கத் தமிழ் இலக்கியங்களேயாகும்.

நம் தாய்மொழி தமிழ். தமிழ் என்ற சொல்லினைத் தொல்காப்பியனாரே ஆண்டுள்ளார்.

**தமிழென் கிளவியும் அதனோ ரற்றே.**
—தொல்காப்பியம் : எழுத்து : புள்ளிமயங்கு : 90

மேலும், பண்டைக் காலத்தில் வாழ்ந்த புலவர்கள் தமிழ்மொழி வழங்கிய நிலத்தினைத் தமிழகம், தமிழ்நாடு என்று வழங்கினர். தமிழ் மண்ணைக் குறிக்கும் தமிழ்நாடு, தமிழகம் என்ற இச்சொற்கள் சங்க இலக்கியங்கள் தொடங்கி இற்றை நாளில் எழும் இலக்கியங்கள் வரை பயின்றுவரக் காணலாம். அவ்வக் காலத்தில் எழுந்த இலக்கியங்களில் 'தமிழ்நாடு' என்ற பெயர்க் குறிப்பு எவ்வெவ்வாறு இனிமையுறக் கிளத்தப்பட்டுள்ளது என்பதனைக் கண்டறிவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தொல்காப்பியனார் பொருளதிகாரத்தில் செய்யுளியலில் யாப்பைப் பற்றிக் குறிப்பிட வந்தவிடத்து,

**வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பில்**
**நாற்பெயர் எல்லை யகத்தவர் வழங்கும்**
**யாப்பின் வழியது என்மனார் புலவர்**
—தொல்காப்பியம் : செய்யுளியல் :79

என்று தமிழ் நாட்டைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வடிகளுக்கு உரை எழுதிய பேராசிரியர், 'மூவரெனப்படுவார்

தமிழ்நாட்டு மூவேந்தருமாயினார்' 'நாற்பெயரெல்லை யகமென்பது தமிழ்நாடென்றவாறு' என்றும் குறிப்பிடு வதோடு, 'தமிழ்நாட்டார் வழங்கும் மரபுப் பகுதி அவை யெனவே யாப்பும் மரபுங் கருதியதாயிற்று, இச்சூத்திர மென்பது இதனாற் பெற்றாம்' என்றும் குறிப்பிட்டுள் ளதனை நோக்க, 'தமிழ்நாடு' என்ற சொல்லினை அவர் விளங்கக் கையாண்டுள்ளார் என்பதனை அறியலாம்.

தொல்காப்பியத்திற்குப் பாயிரம் பாடிய தொல்காப்பி யனாரின் ஒருசாலை மாணாக்கராகிய பனம்பாரனார்,

**வடவேங்கடம் தென்குமரி**
**ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து**

என்று தமிழ்நாட்டின் எல்லையைக் குறிப்பிடும் பொழுது தமிழ் நாட்டினைத் தமிழ்கூறு நல்லுலகம் என்ற சொல் லால் சுட்டிக் கூறியுள்ளார்.

நாடு, அகம், வரைப்பு, புலம், எல்லை முதலிய சொற் கள் ஒரு பொருள் குறித்த பல சொற்களாம்.

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான பதிற்றுப்பத்து என்னும் நூலின் இரண்டாம் பத்தின் பதிகம்,

**இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்**
**தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்பொடு**

என்று தமிழ் நாட்டைத் 'தமிழகம்' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றது.

பரிபாடல் திரட்டின் 8வது பாடல் வருமாறு :

**தண்டமிழ் வேலித் தமிழ்நாட்டக மெல்லாம்**
**நின்று நிலைஇப் புகழ்பூத்த லல்லது**
**குன்றுத லுண்டோ மதுரை கொடித்தேரான்**
**குன்றமுண் டாகு மளவு.**

ஈண்டு, 'தமிழ் நாடு' என்ற சொல்லே வந்திருப்பது நோக்கத்தக்கதாகும்.

புறநானூற்றில் பிட்டங் கொற்றனைக் கருவூர்க் கந்தப்பிள்ளை சாத்தனார்,

**கைவள் ஈகைக் கடுமான் கொற்ற**
**வையக வரப்பில் தமிழகம் கேட்பப்**
**பொய்யாய்ச் செந்நா நெளிய வேத்திப்**
**பாடுப வென்ப பரிசிலர் நாளும்**

—புறநானூறு : 198 :17-20

என்று பரிசிற்றுறையாகப் புகழ்ந்து பாடியுள்ளார்.

இப்பகுதிக்குப் புறநானூற்றின் பழைய உரைகாரர் ''கையான் வழங்கும் வள்ளிய கொடியினையும் கடிய குதிரையையுமுடைய கொற்ற! உலகத் தெல்லையுள் **தமிழ் நாடு** கேட்கப் பொய்யாத செவ்விய நாவருந்தும்படி வாழ்த்திப் பாடுவரென்று சொல்லுவர்பரிசிலர் நாடோறும்'' என்று உரை எழுதியுள்ளமை உன்னி மகிழ்தற்குரியது.

பத்துப்பாட்டின் ஆறுவது பாட்டான மதுரைக் காஞ்சியில்,

**தென்னவன் பெயரிய துன்னருந் துப்பின்**

—மதுரைக்காஞ்சி : 40

என்ற தொடருக்கு உரையாசிரியர் நச்சினார்க்கினியர், 'இராவணனைத் **தமிழ்நாட்டை** யாளாதபடி போக்கின' என்று உரை எழுதியுள்ளார்.

தமிழ்மொழியின் முதற் பெருங்காப்பியம் என்றும் முத்தமிழ்க் காப்பியம் என்றும், குடிமக்கள் காப்பியம் என்றும், தனிப்பெரும் முதல் நூல் என்றும் பலவாறாகச் சிறப்பித்துப் பேசப்படும் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தில்—

சேரன்தம்பி இசைத்த சிலப்பதிகாரத்தில்தான் முதன் முதலாக நேரடியாகப் பலவிடங்களிலும் 'தமிழ் நாடு' என்ற சொல் பயின்று வரக் காணலாம். குன்றக் குறவர்கள் மூலமாகவும் தண்டமிழாசான் சாத்தன் மூலமாகவும் கண்ணகி வரலாற்றைக் கேட்ட சேரன் செங்குட்டுவன், பத்தினிக் கடவுளுக்குரிய படிமம் பாங்குறச் சமைக்க வேண்டுமென முடிவெடுக்கிறான். அக் கல்லினை எங்கிருந்து எடுத்து வருவது? என்ற கேள்வி பிறக்கிறது. தன் அறிவுடை அமைச்சரை நோக்க அவர் எழுந்து, பொதிய மலையிலிருந்தும், இமய மலையிலிருந்தும் பத்தினிக் கடவுளுக்குரிய கல் கொண்டு வரலாம். பொதிய மலையிலிருந்து கல் கொண்டுவந்தால் காவிரியாற்றிலும், இமய மலையிலிருந்து கல் கொண்டு வந்தால் கங்கைப் பேரியாற்றிலும் நீராட்டலாம் என்றார். இறுதியில் இமய மலையிலிருந்து கல் கொணர்ந்து கங்கையில் நீர்ப்படை செய்வது என்று முடிவு செய்யப்படுகிறது.

அதுபொழுது வில்லவன் கோதை என்னும் அமைச்சன் எழுந்து,

**இமிழ்கடல் வேலியைத் தமிழ்நாடு ஆக்கிய**
**இதுநீ கருதினை யாயின் ஏற்பவர்**
**முதுநீர் உலகின் முழுவதும் இல்லை**

—சிலப்பதிகாரம் : காட்சிக் காதை : 165-167

என்றும் பேசுகின்றான். உடனே அழும்பில் வேள் என்னும் செங்குட்டுவனின் தானைத் தலைவன் எழுந்து,

**இமய மால்வரைக்கு எங்கோன் செல்வது**
**கடவுள் எழுதவோர் கற்கே யாதலின்**
**வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாம்**
**தென்தமிழ் நன்னாட்டுச் செழுவில் கயல் புலி**
**மண்டலை யேற்ற வரைக**

—சிலப்பதிகாரம் : காட்சிக் காதை: 268-172

எனப் புகன்றான்.

இளங்கோவடிகள் 'தமிழ்நாடு' என்ற சொல்லைத் தம் காவியத்தில் , புகார்க்காண்டத்திலும் ஆண்டுள்ளார். கோவலன் மதுரையைக் குறிப்பிடுகின்றபொழுது

**தென்மிழ் நாடாளும் தீதுதீர் மதுரை**

—சிலப்பதிகாரம்: நாடுகண் காதை: 58

என்று குறிப்பிட்டுள்ளான்.

மதுரைக் காண்டத்தின் இறுதிக் கட்டுரையில்,

**வடவாரியர் படை கடந்து**
**தென்தமிழ் நாடு ஒருங்குகாணப்**
**புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்**
**அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்**

என்றும், வஞ்சிக் காண்டத்தில் வரும் வாழ்த்துக் காதையின் உரைப்பாட்டு மடையில்,

**தென்தமிழ் நாடாளும் வேந்தர் செருவேட்டுப் புகன்றெழுந்து**

என்றும் வருகின்ற பகுதி கொண்டு தமிழ்நாடு என்ற சொல்லை இளங்கோவடிகள் ஆண்டுள்ளமையை அறியலாம்.

'தமிழகம்' என்ற சொல்லையும் 'தமிழ்நாடு' என்ற பொருளில்,

**இமிழ்கடல் வரைப்பின் தமிழகம் அறியத்**
**தமிழ் முழு தறிந்த தன்மைய னாகி**

—சிலப்பதிகாரம்: அரங்கேற்றுகாதை:87-88

என்று அரங்கேற்று காதையில் அழகுற அமைத்துள்ளார். சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், இவ்விடங்களில் எல்லாம் தமிழ்நாடு என்றே பொருள் கூறிச் செல்வது சற்று ஆழ்ந்து நோக்குதற்குரியது.

மணிமேகலையில் உலகவறவி புக்க காதையில்

**சம்புத் தீவினும் தமிழக மருங்கில்**

—மணிமேகலை: உலகவறவிபுக்க காதை: 62

என்ற தொடரில் தமிழகம் என்ற சொல் வந்துள்ளது.

அடுத்து, இடைக்கால இலக்கியங்களுக்கு வருவோம். 'பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ' ரான தொண்டர்சீர் பரவ வல்ல சேக்கிழார் பெருமான் பெரியபுராணம் என வழங்கும் தம் திருத்தொண்டர் புராணத்தின் பலவிடங்களிலும் 'தமிழ்நாடு' என்ற சொல்லை எடுத்தாண்டுள்ளார். திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில்,

**தமிழ்நாட்டில் போனார் ஞானத் தலைவனார்**

—பாட்டு: 289

**மண் குலவும் தமிழ்நாடு**

—பாட்டு: 400.

**பொங்குதமிழ்த் திருநாடு**

—பாட்டு: 410

**தேம்பொழியும் செந்தமிழ் நாட்டினில்**

—பாட்டு: 412

என்றும்,

காரைக்காலம்மையார் புராணத்தில்,

**செந்தமிழ்த் திருநா டெய்தி**

—பாட்டு: 43.

என்றும்,

திருஞானசம்பந்த மூர்த்திகள் புராணத்தில்,

**பூமியர் தமிழ்நாட் டுள்ள பொருவில்**
**நீர்ப்பதிகள்**

—பாட்டு: 601.

என்றும்,

தண்தமிழ் நாட்டு மன்னன்

பாட்டு: 751.

என்றும்,

சிறுத்தொண்டநாயனார் புராணத்தில்,

வண்தமிழ் நாட்டுச் செங்காட்டங்குடி

—பாட்டு: 35.

என்றும், 'தமிழ்நாடு' என்ற சொல்லினை ஆண்டுள்ளார். சோழ நாட்டின் பேரமைச்சராக விளங்கிய அவர் தமிழ் நாட்டினை நாமணக்கச் சிறப்பித்துள்ளார்.

கல்வியிற் பெரிய கம்பர் தம் இராமாயணத்தில் கிட்கிந்தா காண்டத்தில் சீதா பிராட்டியைத் தேடித் தென் திசை செல்லும் வானரப்படைகளுக்கு வழிகூறும் சுக்கிரீவன் கூற்றாகத் 'தமிழ் நாடு' என்ற சொல்லினை எடுத்தாளு கின்றார். 'பிறக்கம் உற்ற மலைநாடு நாடி, அகன் தமிழ் நாட்டுப் பெயர்திர் மாதோ' என்று சுக்கிரீவன் கூறும் கூற்றில் 'தமிழ் நாடு' என்ற சொல்லினைக் காண்க.

மேலும் சுக்கிரீவன் தமிழ் தந்த அகத்திய முனிவரின் இருப்பிடத்தைக் குறிப்பிடும் பொழுதும் 'தமிழ் நாடு' என்ற சொல் ஆளப்பட்டுள்ளது. 'தென் தமிழ் நாட்டு அகன் பொதியில் திருமுனிவன் தமிழ்ச் சங்கம்' என்று அகத்தியர் இருப்பிடம் குறிப்பிடப்படும்பொழுது 'தமிழ் நாடு' என்ற சொல் அமைந்திருப்பது நம்மைப் பெரிதும் மகிழ்வூட்டுவதாகும்.

'கோவை உலா அந்தாதிக்கோர் ஒட்டக் கூத்தன்' என்றும், 'கவிராக்ஷஸன் கௌடப் புலவன் ஒட்டக் கூத்தன்' என்றும், 'கவிச் சக்ரவர்த்தி ஒட்டக்கூத்தன்' என்றும் பலபடியாகப் பாராட்டப் பெறும் ஒட்டக்கூத்தர் தாம் இயற்றிய மூவருலாவில்,

**கங்கைத் துறைவன் பொறையன் தமிழ்நாடன் சோணாட்டு**
**இறைவன் திருப்பவனி என்றாள்**

—இராசராச சோழனுலா : 189.

என்றும், தக்கயாகப் பரணியில்,

**என்னுஞ்சமண் மூகருநான் மறையோ**

**ரேறுந்தமிழ் நாடனும்**

—தக்க : கோயிலைப் பாடியது : 76

என்றும், தனிப்பாடலில் 'தென்னன் தமிழ் நாட்டைச் சீறியோ' என்றும் தமிழ்நாடு என்ற சொல்லைப் பெய்துள்ளார்.

பதினேழாம் நூற்றாண்டின் இணையிலாத பெரும் புலவரான குமரகுருபரர் தம் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில்.

**தடம்பணை விரிந்த தமிழ்நாடு**

—சப்பாணிப் பருவம் : 4

என்று பாடியுள்ளார். பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணத்தில்,

**பருங்கை மால்வரை பூழியன் பைந்தமிழ் நாட்டின்**

—இரசவாதஞ் செய்த படலம் : 2

என்ற தொடரில் 'தமிழ் நாடன்' என்ற சொல் வந்துள்ள

இருபதாம் நூற்றாண்டுப் புலவரான பாட்டுக்கொரு புலவராம் பாரதியார்,

**செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்**

**தேன்வந்து பாயுது காதினிலே**

என்று செந்தமிழ் நாட்டினைச் சிறப்பித்துள்ளார். இவ்வாறாகத் தொல்காப்பியனார் முதலாகப் பாரதியார் ஈறாக வாழ்ந்த புலவர் பெருமக்கள் 'தமிழ்நாடு' என்ற சொல்லினைத் தம் நூலில் கையாண்டுள்ளனர் என்பது இக்கட்டுரையால் நன்கு புலப்படுத்தப்படுகின்றது. தமிழ் மொழி வழங்கும் பகுதி தமிழகம், தமிழ்நாடு என்று தண்டமிழ் இலக்கியங்களில் பண்டுதொட்டு இன்றுவரை வழங்கி வந்திருப்பது நாம் எண்ணி மகிழ வேண்டிய ஏற்றம் தரும் செய்தியாகும்.

# 6. அருளும் பொருளும்

அன்பு உலகை ஆளும் நீர்மையுடையது, அனைத்துயிர்க்கும் அன்பு செலுத்துதல் வேண்டும் என்பதே, வாழ்வின் தலையாய அறமாகும். 'அன்பின் வழியது உயிர் நிலை' என்றார் வள்ளுவர். அன்பற்றார் மனிதர் போன்று தோற்றம் தரினும், அவரை என்புதோல் போர்த்த நடைப் பிணமாகவே கருதவேண்டும் என்பது அவர் மனக்கோள் ஆகும். 'அன்பிற்குத் தாழ் இல்லை. அன்புடையார் தம் உடம்பினையும் பிறர்க்கு உரிமையாக்கி வாழும் பெற்றி உடையவராவர். அன்பு ஆர்வத்தினையும் அதன் பின்னர் நட்பினையும் பயக்கவல்லதாகும். அறம், மறம் ஆகிய இரண்டு மாறான உயிர்ப் பண்புகளுக்கும் அன்பே துணை செய்கின்றது. அன்பினை அகத்தில் கொண்டு புறத்தில் புலப்படுத்தாத வாழ்வு, வற்றிய பாலை நிலத்தின்கண் பட்டமரம் தளிர்த்தாற் போன்ற தன்மையுடையதாகும்.' இவ்வாறு பலவாறாக அன்பின் சிறப்பினைத் திருவள்ளுவர் வலியுறுத்திக் கூறுவர். வாழும் முறையினைக் கூறவந்த பாரதியாரும் உயிர்களிடத்தில் அன்பு வேண்டுமென்றும், தெய்வம் உண்டு என்று தெளிதல் வேண்டுமென்று உறுதியான உள்ளம் வேண்டுமென்றும், இவையே வாழும் முறைமையாகும் என்றும் கூறுகின்றபொழுது அன்பினையே முதலாவதாக வற்புறுத்தியுள்ளார்.

**உயிர்களிடத்தில் அன்பு வேணும்—தெய்வம்**
**உண்மை யென்று தானறிதல் வேணும்;**

**வயிர முடைய நெஞ்சு வேணும்—இது**
**வாழும் முறைமையடி பாப்பா!**

—பாப்பாப் பாட்டு : 16

என்றார் பாரதியார்.

அன்பின் வடிவமாகவே ஆண்டவன் அமர்ந்துள்ளான். என ஆன்றோர் உரைப்பர், 'அன்பே சிவம்' என்ற நிறை மொழியும் இதனையே விளக்கி நிற்கிறது. தவமுனிவராம் திருமூலரும்,

**அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்த பின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே**

—திருமந்திரம் : 270

என்று குறிப்பிட்டுள்ளார். அன்பும் சிவமும் ஒன்றென்றும், அன்பினைக் கண்டார் சிவனைக் கண்டவராவர் என்றும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார் திருமூலர். எனவே அன்புருவாய் விளங்கும் ஆண்டவன் திருப்பெயரைச் சாற்றினால் தீவினைகள் தீரும்; பின் தேவ நிலை எய்திச் சிவகதி பெறலாம் என்றும் மேலும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

**சிவ சிவ என்கிலர் தீவினை யாளர்**
**சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்**
**சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர்**
**சிவ சிவ என்னச் சிவகதி தானே.**

—திருமந்திரம் : 2716

இத்தகைய ஆராத அன்பின் முதிர்ந்த நிலையே அருள் என்பது. தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் பரிவே அன்பெனப்படும்; தொடர்பில்லாதவர் மாட்டும்

கொள்ளும் தூய அன்பே—பரிவுகலந்த இரக்கமே அருள் என வழங்கும். எனவே அன்பின் முதிர்ந்த நிலையில் முகிழ்ப்பது அருள் எனக் கொள்ளலாம். அன்பில் தாயன்பு சிறந்தது என்பதால்தான், அருள் வடிவான ஆண்டவனைப் பெரியோர் 'தாயிற் இறந்த தயாபரன்' என்றும், 'தாயினும் சாலப் பரியவன்' என்றும் பாராட்டிப் பேசியுள்ளனர்.

இனி அன்பின் எல்லையில் தோன்றும் அருளினை நாம் ஒருவாறு காண்போம்.

சங்க காலத் தமிழ் மக்கள் ஆறறிவிற்குக் குறைந்த அஃறிணை உயிர்களையும் தங்களைப் போல எண்ணி அன்பு காட்டி அருள் செய்தனர். இயற்கையோடு கை கோத்து வாழ்ந்த வாழ்வே பழந்தமிழரின் வாழ்வாகும். இயற்கையின் பின்னணியில் எழுந்தனவே சங்கப் பாடல்கள் எனலாம். தொல்காப்பியனார் கூறும் முதல் கருப் பொருள்கள் இயற்கையின் வடிவமே அன்றோ? பேசாதனவற்றைப் பேசுவன போலவும், கேளாதனவற்றைக் கேட்குந போலவும் எண்ணிப் பழந்தமிழ்ப் புலவர்கள் கவிதை படைத்துள்ளனர். தொல்காப்பியனார் கூறும் இந்நெறி—புலவர்கள் கவிதை படைத்த இச்செந்நெறி—அன்பினையும் அதன் முதிர்ந்த நிலையாகிய அருட் பண்பினையும் நன்கு விளக்குவனவாம்.

அன்னம், நாரை முதலிய பொருள்களைத் தூது விடுவதாகக் கூறும் மரபு தமிழ் மரபாகும். நாள்தோறும் வந்து தன்னைச் சந்தித்து இன்னுரையாடி விட்டுச் செல்லும் தலைவன் பின்னொருகால் வாராது நின்ற விடத்து, அவன் தன்னைச் சந்தித்துச் சென்ற வேங்கை மரத்தடியை யெண்ணித் துயருறுகிறாள் தலைவி. கொடிய இரவிலே தங்கள் சந்திப்பின்போது துணையாக நின்ற அந்த வேங்கை மரத்திற்குத் தலைவன், பறவைகள் வழி

கூடத் தூதுசொல்லி யனுப்பவில்லையே என்று தலைவி புலம்புகிறாள். தன் துயரினும் வேங்கை புலம்புமே என்று எண்ணித் துயருறும் தலைவியின் அரிய அருட் பண்பு இது:

**நமக்கொன்று உரையார் ஆயினும் தமக்கொன்று**
**இன்னா இரவின் இன்துணை யாகிய**
**படப்பை வேங்கைக்கு மறந்தனர் கொல்லோ**
**துறத்தல் வல்லியோர் புள்வாய்த் தூதே.**

—குறுந்தொகை: 226

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், தன் வினை முடித்து விரைந்து வீடு நோக்கி வருகிறான். அவன் ஏறிச் செல்லும் தேர் மணி ஓசையெழுப்பி விரைந்து செல்கிறது. தேரின் மணியோசை, இணையாக இருந்து மகரந்தப் பொடிகளை மலரினின்று உறிஞ்சி உண்டு கொண்டிருக்கும் பறவைகளை ஓட்டிவிடுமே என்று அச்சங்கொண்ட தலைவன் தேரினை நிறுத்திக் கீழே இறங்கித் தேர் மணிகளின் நாக்கினைக் கட்டிவிட்டு ஒலியெழும்பாத நிலையில்—பறவைகள் அமைதி குலையாத நிலையில்—தேரோட்டிச் சென்றான் என்பது அகநானூறு நமக்குத் தெரிவிக்கும் நற்செய்தியாகும்.

**பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த**
**தாதுண் பறவை பேதுறல் அஞ்சி**
**மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்.**

—அகநானூறு : 4 : 10-12

நெஞ்சம் சோர்ந்த நிலையில் மாதவி கானல்வரிப் பாட்டினைப் பாடுகின்றாள். தேரில் வந்த தலைவன் தனக்குத் தலையளி செய்ய மறந்தாலும், தான் அவனை மறத்தல் இயலாது என்பதனை அரும்புகளுக்கும் அன்னப் பறவைகளுக்கும் தெரியப்படுத்துகின்றாள் மாதவி.

**தம்முடைய தண்ணளியும் தாமுந்தம் மான்றேரும்
எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க
அம்மென்இணர அடும்புகாள் அன்னங்காள்
நம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால்.**

—சிலப்பதிகாரம் : கானல்வரி : 32

இத்தகு அருள் நெறியினையே சீகாழிப்பகுதியில் பிறந்த 'சிவம் பெருக்கும் திருஞான சம்பந்தரும்' கையாளு கின்றார். கிளிக்கு அருளோடு தேனோடு பாலினைத் தந்து, அதற்குக் கைம்மாறாகத் தோணியப்பராம் பிறையாளனின் திருப்பெயரினை—'சிவசிவ' என்ற உயிர்மொழியினை ஒருகால் ஒலிக்க வேண்டும் என்று குறையிரந்து நிற்கின்றார்.

**சிறையாரும் மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளம்
துறையாரும் கடற்றோணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே.**

—முதல் திருமுறை : திருத்தோணிபுரம் : 10

திருஞான சம்பந்தப்பெருமான் கிளியினை இறைவன் பால் தூது விட்டார். வைணவ பக்தரும் பன்னிரு ஆழ்வார் களில் ஒருவரும் தலையாயவரும் ஆகிய நம்மாழ்வார் அவர்கள் நாயகன்—நாயகி பாவத்தில் அமைந்துள்ள தம் பாடலில் எளிய உயிர்க்கும் இரங்கியருளும் அருட் பண்பினைத் தெளிவுற விளக்கியுள்ளார். திருமால்பால் ஆராத அன்பு கொண்ட அடியாள் ஒருத்தி, தான் வளர்க் கும் சிறு பூவையினை அழைத்துத் திருமாலிடம் தூது சென்று தன் காதல் நோயினை உரைத்து வரும்படி வேண்டிக் கொண்டாள். ஆனால் சிறு பூவையோ அவள் குறை முடிக்காமல் வாளாயிருந்துவிட்டது. அதன் பயனாகக் காதல் நோய்வாய்ப்பட்ட காரிகை வண்ணம் மாறி வடிவு திருந்தி நொந்திளைத்தாள்; படுத்த படுக்கை

யானாள்; சிறு பூவைக்குத் தானியக் கதிர்மணிகளை இட்டுப்பேணவும் ஆற்றாத நிலைக்குட்பட்டாள். எனவே வேறிடம் நாடிச் சென்று சிறு பூவை பிழைத்துக் கொள்வதாக என்று அதனிடம் எடுத்துரைத்தாள்:

**நீயலையே சிறுபூவாய் நெடுமாலார்க்கு என்தூதாய்**
**நோயெனது நுவலென்ன நுவலாதே இருந்தொழிந்தாய்**
**சாயலொடு மணிமாமை தளர்ந்தேன்நான் இனியுனது**
**வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே**

—திருவாய்மொழி : 1 : 4—8.

இப்பாடலில் தலைவி திருமால்பால் கொண்ட பக்தியுடன் சிறு பூவையினிடத்துக் கொண்ட அன்பும் அருளும் புலனாகின்றன.

அருள் உணர்வு காரணமாகத்தான் காட்டிலே குளிரால் நடுங்கிய கோலமயிலுக்குத் தன் போர்வையை நல்கினான் பேகன்; 'பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை நாந்தழும்பிருப்பப் பாடா தாயினும் கறங்குமணி நெடுந்தேர் கொள்ளெனக் கொடுத்தான் பரந்தோங்கு பண்பிற் பாரிப்பெருமகன்'. நீண்டநாள், வாழவைக்கும் பெறற்கரிய நெல்லிக்கனியைப் பெற்றுத் தான் உண்ணாமல் ஔவையார்க்கு அருளால் ஈந்தான் அதிகமான். 'நட்டோர் உவப்ப நடைப் பரிகாரம் முட்டாது தந்தான்' நள்ளி. கூத்தர்க்காகத் தன் குறும்பொறை நாட்டையே கொடுத்தளித்தான் ஓரி. எளிய புறாவின் உயிர்க்காக இரங்கித் துலாக்கோல் ஏறித் தன்னையே தந்தான் சிபி. இவ்வாறு அருள் உள்ளங்கொண்டு அருளாட்சிக்கு உதவிய பலரை நாம் இலக்கியத்தில் காணக்கூடும்.

அருளின் சிறப்பினை நன்குணர்ந்த திருவள்ளுவர் 'அருளுடைமை' என்ற அதிகாரத்தில் பொருள்களாகிய

செல்வங்கள் இழிந்தவர்களிடத்திலும் இருக்க, உயர்ந்தவர்களிடத்தில் மட்டுமே அருட்செல்வம் இருக்குமென்றும், அவ் அருட்செல்வமே செல்வங்களில் சிறந்த செல்வமாகுமென்றும் கூறியுள்ளார்.

**அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்**
**பூரியார் கண்ணும் உள.**

—திருக்குறள் : 241

மேலும் அவர், வாழ்க்கைக்குத் துணையாக உள்ளது அருளே என்றும், அருள் பொருந்திய நெஞ்சம் உடையவர்களுக்கு அறியாமையாகிய இருள் பொதிந்த துன்ப உலகில் வருந்திவாழும் வாழ்க்கை இல்லை என்றும் உயிரின் பொருட்டு அஞ்சி வாழும் தீவினை அருளுடையோனுக்கு இல்லை என்றும், அருளை மறந்தவர் அறவழி செல்லாத குறிக்கோளற்ற வாழ்வினைக் கொண்டவர் ஆவர் என்றும் அருளின் சிறப்பினை விளக்கியுள்ளார். இவ்வாறு விளக்கி வருங்கால் பொருள் பற்றிய குறிப்பினையும் அருளோடு இணைத்துச் சேர்த்து ஒரு குறளில் குறிப்பிட்டுள்ளார். அக் குறட்பா வருமாறு:

**அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு**
**இவ்வுலகம் இல்லாகி யாங்கு.**

—திருக்குறள்: 247

இக்குறட்பாவின் பொருள் ''பொருள் இல்லாதவர்க்கு இவ்வுலகத்து வாழ்க்கை இல்லாதவாறுபோல, இவ்வுலக உயிர்களிடத்து அன்பு இல்லாதவர்க்கு அவ்வுலகத்து வாழ்க்கை இல்லையாம்'' என்பதாகும்.

எனவே பொருளுக்கும் அருளுக்கும் உள்ள தொடர்பினை ஒருவாறு காண்போம். இவ்வுலக வாழ்விற்கு இன்றியமையாதது பொருளாகும். பொருள் என்ற சொல்லே பொருள் பொதிந்த ஒன்றாகும். ஒரு பொரு

ளாக மதிக்கத் தகாதவரையும் மதிப்புடையவராகச் செய் வது பொருளன்றி வேறு இல்லை என்பர் திருவள்ளுவர்.

**பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருளல்லது இல்லை பொருள்**

—திருக்குறள்: 751

மேலும் அவர் பொருள் என்று சொல்லப்படும் நந்தா விளக்கு, தன்னைச் சேர்த்து வைத்துள்ளவர் நினைத்த இடத்திற்குச் சென்று, நின்ற இடையூற்றினைக் கெடுக்கும் என்றும், பொருளற்றோர் எள்ளலையும், பொருளுடையார் சிறப்பினையும் பெறுவர் என்றும் பொருளின் பெருமையைக் குறித்துள்ளார். 'பொருள் அற்றவரைப் பொருளாகச் செய்வது பொருள்' என்று குறிப்பிட்ட வள்ளுவர் அந்தப் பொருளை ஒருவன் தவறாது ஈட்டவேண்டும் என்றும், ஏனெனில் அவனுடைய பகைவரின் செருக்கை அழிக்க வல்ல வாள் அதைவிடக் கூர்மையானது வேறில்லை என்றும் குறிப்பிட்டுள்ளார்.

**செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்**
**எஃகதனிற் கூரியது இல்.**

—திருக்குறள் :759

பொருளை ஈட்டியவர் அறத்தினையும் இன்பத்தினையும் ஒருசேரப் பெறுவர் என்று பொருளின் சிறப்புக் கூறும் திருவள்ளுவர், அருளொடும் அன்பொடும் பொருந்தாத வழிகளில் வந்த பொருளின் ஆக்கத்தைப் பெற்று மகிழா மல் அதைத் தீமையானது என்று நீக்கி விடவேண்டும் என்றும் வற்புறுத்துகின்றார்.

**அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்**

**புல்லார் புரள விடல்.**

—திருக்குறள்: 755

இதனால் பொருள் மிகவும் வேண்டப் படுவதாக இருந்தாலும் கூட, அப்பொருள் அருள் வழியில் வருவ தாக இருக்கவேண்டும் என்பது புலனாகின்றது.

பழந்தமிழர் தமிழர் கொண்ட அறுவகைப் பிரிவுகளில் ஒன்று பொருள்வயிற் பிரிவாகும் :

**பொருள் வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே**
**உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத் தான.**

*—தொல்காப்பியம் : அகத்திணை இயல் : 33*

இவ்வாறு பொருள்வயிற் பிரிவு என்ற பிரிவு அமைந் திருப்பதே பொருளின் சிறப்பினைப் புலப்படுத்துவதாகும். 'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்ற பழமொழி யும் இது குறித்தே எழுந்தது. 'விழைவதூஉம் விட்டோம் என்பார்க்கும்' கூடப் பொருள் ஓரளவு தேவைப்படுகின்றது. மேலும் அன்பினால் பெறப்பட்ட அருள் என்று கூறப்படும் குழந்தை, பொருள் என்று கூறப்படும் செல்வமுள்ள செவிலித் தாயால் வளர்க்கப்படுவதேயாகும் என்று திருவள்ளுவர் கூறுவர்.

**அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்**
**செல்வச் செவிலியால் உண்டு.**

*—திருக்குறள் : 757*

இவ்வாறான கருத்துகள் பொருள், அருள் ஆகிய இரண்டினையும் ஒருசேர உயர்வு படுத்துவதாயிருப்பினும், ஒன்றோடு ஒன்று உயர்வு காண ஒப்பிட்டுக்காணும் பொழுது, பொருளினும் அருளே சான்றோர்களால் பெரிதும் பாராட்டப் பட்டுள்ளது என்பது புலனாகும். பொருள், வாழ்விற்கு இன்றியமையாது தேவைப்படுவதுதான்; ஆனால் பொருளே வாழ்வாகி விடாது. மேலும் பொருள் மிகுந்த வழி பல தவறான வழிகளுக்கு இழுத்துச் செல்

லும் தன்மையுடையது. 'பணம் பத்தும் செய்யும்' என்பர். நல்லவை நாடுவதோடன்றி அல்லவைக்குத் தூண்டும் பெற்றியுமுடையது பொருள். மேலும் ஒருவனை, ஈட்டிய பொருளே இறுதியில் அழிப்பதைக் காணலாம்; வாழ்விற்கு உதவும் பொருளே வாழ்வை முடிக்கப் பயன்படலாம். எனவே பொருள் நமக்குக் கருவியாகலாமே யொழியப் பொருளிற்கு நாம் கருவியாகிவிடக் கூடாது. நமக்கு முன் நல்வழியில் வாழ்ந்து சென்ற சான்றோர் வாழ்க்கை முறைகள் நமக்கு நல்வழி காட்டவல்லன.

திருநாவுக்கரசு நாயனார் திருப்புகலூர்த் திருக்கோயி லில் உழவாரத்தொண்டு செய்கிறார். இறைவன் அவரைச் சோதிக்க எண்ணம் கொண்டார். திருநாவுக்கரசர் புல் செதுக்கும் பொழுதும், காலிற் குத்தும் புல்லையெடுத்து அப்புறம் எறியும் பொழுதும், அப்புல்லோடும் கல்லோடும் பொன்னையும் மணியையும் கலந்து வைத்தார். ஆயினும் ஆண்டவன் அருளையே நினைத்துருகும் அப்பர் பெரு மானுக்குப் பொருளின் மதிப்பு ஒரு சிறிதும் தெரியவில்லை. 'கேடும் ஆக்கமும் கெட்ட திருவின' ராகிய அவர், 'ஓடும் செம்பொனும் ஒக்க நோக்கும்' உளம் பெற்றவர். எனவே செம்பொன்னினையும் நவமணியினையும் உருள் பருக்கை யுடன் ஒக்க நோக்கி, அவற்றைத் தம் உழவாரத்தினில் ஏந்திப் 'பூங்கமல வாவியினிற் புக எறிந்தார்.'

அடுத்து, இளையான் குடிமாற நாயனார் தாம் ஈட்டிய பொருளை ஒரு பொருட்டாக மதியாது 'வரும் அடியவர்க்கு ஆசனத்திடை வைத்தருச்சனை செய்தபின்' உண்டி நாலுவிதத்தில் ஆறு சுவைத்திறனில் அமுது செய் வித்தார். வளஞ் சுருங்கிய நிலையிலும் மனஞ் சுருங்கு தலின்றி, அடியார்களிடம் கொண்ட அருளுணர்வால் திருவமுது படைக்கும் பணியினைத் தொடர்ந்து செய்தார். ஈசன் அருளுடையவரையே—ஆகம நூல் பயின்றவரையே மெய்ப்பொருள் என்று எண்ணி வாழ்ந்தார் கைப்பொருள்

மிகுந்ததிருக்கோவலூர் மன்னர் மெய்ப்பொருள் நாயனார். காடவர் கோமான் கச்சியம் பதியில் பெருங்கோயில் ஒன்று கட்டினான், பொருளால்; திருநின்றவூரில் பொருளில்லாக் காரணத்தால், அருளால் எண்ணி, தம்மனத்தில் கோயில் ஒன்று கட்டினார் பூசலார் நாயனார். ஆண்டவன் பொருளால் கட்டப் பெற்ற கோயிலுக்குச் செல்லாமல் அருளால் கட்டப் பெற்ற கோயிலுக்கே தாம் முதற்கண் எழுந்தருளுவதாகப் பல்லவ மன்னனின் கனவிற் கூறி மறைந்தார். இதனைப் பெரிய புராணத்தில்,

**நின்றவூர்ப்பூச லன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த**
**நன்று நீ டாலயத்து நாளைநாம் புகுவோம் நீ இங்கு**
**ஒன்றிச் செயலை நாளை யொழிந்துபின் கொள்வாய் என்று**
**கொன்றையார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப் போந்தார்**

—பெரிய புராணம்; பூசலார் நாயனார் : 10

என வரும் பாடல் கொண்டு அறியலாம்.

சங்க காலத்திலும் பொருள் வாழ்விற்குத் தேவையென்றாலும் கூடப் பொருளினும் அருளே போற்றப்பட்டது. தலைவன் ஈட்டிவரும் பொருளைவிட, அவன் நெஞ்சில் சுரக்கும் அருளையே தலைவி பெரிதும் விரும்பினாள்.

**பொருளே காதலர் காதல்**
**அருளே காதலர் என்றி நீயே.**

—அகநானூறு 53 : 15,16

அருளை அகத்திலிருந்து அகற்றிய நிலையில் தலைவியைத் தான் தனித்துவிடுத்து நீங்கினால், தணியாத துயர் உறுவாளே என்று கருதித் தலைவன் பல்வகைப் பொருள் நலமும் பொருந்திய காவிரிப்பூம்பட்டினமே கிடைப்பதாக இருந்தாலும் அது வேண்டுவதன்று என்று

கூறிச் செலவழுங்கினதாகக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் தம் பட்டினப்பாலையில் பாடியுள்ளார்;

**முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்**
**வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய**
**வாரேன் வாழிய நெஞ்சே.**

—பட்டினப்பாலை : 218–220

தலைவன் தலைவியின்பாற் கொண்ட தணியாத காதலும், தலைவி தன் பிரிவால் துயருறுவாளே என்னும் அருளுணர்வும் இவ்வடிகளில் விளங்கக் காணலாம்.

அருளுருவாய் ஆண்டவனைக் கண்ட நாடு இந்த நாடு. எவ்வுயிர்க்கும் இரங்கியருள் சுரக்கும் மனமே எம்பெருமான் நடம் புரியும் இடம் என்றார் வடலூர் வள்ளலார். முன்னியது முடிக்கும் முருகப்பெருமானை வணங்கி வழி படும் அடியார்கள் பொருளையும் பொன்னையும் போகத் தினையும் வேண்டாமல் அருளையும் அன்பையும் அறத்தையுமே அவன்பால் அகங்குழைந்து வேண்டிப் பரவு கின்றார்கள் என்பதனைப் பரிபாடல் கூறும்:

**......யாம் இரப்பவை**
**பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்**
**அருளும் அன்பும் அறனும் மூன்றும்**
**உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே.**

—பரிபாடல் : 5 : 78-81

இதுகாறும் கூறியவற்றால் அன்பே உயிர் வாழ்க்கைக்கு அடிப்படையானது என்பதும், அவ்வன்பின் முதிர்ந்த நிலையே அருள் என்பதும், பொருளில்லார்க்கு இவ்வுலக வாழ்வு இல்லையென்பதும், அதுபோன்றே அருளில்லார்க்கு அவ்வுலக வாழ்வு இல்லையென்பதும், பொருளற்றவரைப் பொருளாகச் செய்வது பொருள் என்பதும், ஆயினும்

பொருள் நம் வாழ்விற்கு உதவும் கருவியாக அமைய வேண்டுமே யல்லாது, நாம் பொருளிற்குக் கருவியாகிவிடக் கூடாது என்பதும், பொருளினும் அருளே பல்லாற்றானும் மேம்பாடுடையது என்பதும், அறச் சான்றோர்கள் வாழ்ந்து வழிகாட்டிவிட்டுச் சென்ற நெறி அருள்நெறி என்பதும், அவ்வருட்பண்பினை அடைய முயலவேண்டும் என்பதும் நன்கு தெளிவதால் காணலாம்.

# 7. தொண்டை நாட்டின் பெருமை

பழந்தமிழ் நாட்டின் சிறப்பிற்குரிய அரசமரபினர் மூவர் ஆவர்; அவரே சேர சோழ பாண்டியர் என வரலாற்றிலும் இலக்கியங்களிலும் சிறப்புறக் குறிக்கப் பெறுவர். தொல்காப்பியனார் புறத்திணை இயலில்,

**போந்தை வேம்பே ஆரென வரூஉம்**
**மாபெருந் தானையர் மலைந்த பூவும்**

—தொல்காப்பியம் : புறத்திணை இயல் : 5

என்று சேர பாண்டிய சோழர் குடிக்கு உரிய அடையாளப் பூமாலை பனந்தோடு, வேம்பு, அத்தி என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் தமிழ்மறையாம் திருக்குறளுக்குச் சிறந்த முறையில் செறிந்த உரையினை ஆக்கியளித்த பரிமேலழகர்,

**வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி**
**பண்பின் தலைப்பிரிதல் இன்று**

—திருக்குறள் : 955

என்ற குறளுக்கு உரை எழுதும்பொழுது ''பழங்குடி—தொன்றுதொட்டு வருதல் என்று குறிப்பிட்டு—அது 'சேர சோழ பாண்டியர்' என்றாற் போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல்'' என்று குறிப்பிட்டுள்ளமையும் ஈண்டு நன்கு நினைக்கத்தக்கது.

இத்தகு சிறந்த மூவேந்தர் குடியே யன்றியும் எண்ணற்ற குறுநில மன்னர் குடிகள் தமிழகத்தில்

வாழ்ந்து அரசோச்சி நலம் பல பயந்துள்ளன. அத்தகு குடிகளில் சிறப்பிடம் பெறத்தக்கதொரு குடி **தொண்டையர்** குடியாகும். இத்தொண்டையர் குடிக்குத் தோற்றுவாய் செய்பவனாக இலக்கியத்தின் வழி அறியப்படுபவன் தொண்டைமான் இளந்திரையன் ஆவன். இவன் முடியுடை மன்னர் மூவரோடு சார்த்தி எண்ணப்படும் பெருமைக் குரியவன் என்றாலும்,

**வில்லும் வேலும் கழலும் கண்ணியும்**
**தாரும் ஆரமும் தேரும் வாளும்**
**மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய**

—தொல்காப்பியம்; மரபியல் : 84

என்னும் நூற்பாவிற்கு, 'மன்பெறு மரபினேனோரெனப் படுவார், அரசு பெறு மரபிற் குறுநில மன்னரெனக் கொள்க; அவை பெரும்பாணாற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காணப்படும்' எனப் பேராசிரியர் உரை எழுதியிருத்தலால் இவனைக் குறுநில மன்னனென்றே நம் முன்னோர் கருதினர் எனத் தெரிகின்றது. மேலும்,

**முந்நீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த்**
**திரைதரு மரபின் உரவோன் உம்பல்**

—பெரும்பாணாற்றுப்படை : 30-31

என்ற பெரும்பாணாற்றுப்படையின் அடிகளுக்கு உரை யாசிரியர் நச்சினார்க்கினியர், 'கடல்போலு நிறத்தை யுடையவன் பின்னிடத்தோனாகிய சோழன் குடியிற் பிறந்தோன், அக்கடலின் திரை கொண்டு வந்து ஏற விட்ட மரபாற் திரையனென்னும் பெயரையுடையவன்' என்று உரை கூறி. மேற்கொண்டு வரலாற்று விளக்கமும் பின்வருமாறு தந்துள்ளார்; ''என்றதனால் நாகப்பட்டினத்துச்சோழன் பிலத்துவாரத்தால் நாகலோ

கத்தே சென்று நாககன்னியைப் புணர்ந்த காலத்து அவள் யான் பெற்ற புதல்வனை என்செய்வேனென்ற பொழுது, தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட அவன் வந்து கரையேறின், அவற்குயான் அரசவுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பலென்று அவன்கூற. அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரை தருதலின் திரையனென்று பெயர் பெற்ற கதை கூறினர்'' என்றுகுறிப்பிட்டுள்ளார். இதற்குச் சான்றாகப் பெரும்பாணாற்றுப் படையின் இறுதியில் காணப்பெறும் பழைய வெண்பாவில் ''பெரிய கடல் இரவு பகல் என ஒன்றின்றி எப்பொழுதும் உறங்காது ஒலியெழுப்பிக் கொண்டேயிருப்பது இளந்திரையனை நாங்கள் பெற்றெடுத்தோம் என்ற செருக்கினாலேயாகும்'' என்ற கருத்து அடங்கிக்கிடக்கின்றது. அவ்வழகிய பாடல் வருமாறு;

**கங்கலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றாய்**
**மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்—வெஞ்சினவேற்**
**கான்பயந்த கண்ணிக் கடுமான் றிரையனை**
**யான்பயந்தே னென்னுஞ் செருக்கு.**

—பெரும்பாணாற்றுப்படை : இறுதிவெண்பா.

மணிமேகலை என்னும் பௌத்த சமயக் காப்பியத்திலும் இதனை யொத்த கருத்துக் காணப்படுகின்றது.

**நாக நாடு நடுக்கின் றாள்பவன்**
**வாகை வேலோன் வளைவணன் றேவி**
**வாச மயிலை வயிற்றுட் டோன்றிய**
**பீலிவளை யென்போள் பிறந்த வந்நாள்**
**இரவிகுலத் தொருவ னிணைமுலை தோயக்**
**கருவொடு வருமெனக் கணியெடுத் துரைத்தனன்**

—மணி: ஆபுத்திரனாடடைந்த காதை : 54—59

இளந்திரையன் என்ற பெயர்க்காரணம் இவ்வாறிருக்க, மகாவித்துவான் பாஷாகவிசேகரர் ரா. இராகவையங்கார் தம் பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சி உரையில் ''இக் கொள்கைகளை மறுத்துத் துரோணர் மகன் அசுவத்தாமனுக்கும், மதனி என்ற அரமகட்கும் தோன்றியவன் பல்லவன் என்றும், போத்து என்பது பல்லவர்க்குரிய இடபக்கொடியையே குறிக்கும் என்றும், தொண்டை என்பது குடிப்பெயர் என்றும், பல்லவப் பெயர்க்கு முன்பே தொண்டையன் என்ற பெயர் உண்டாகியிருக்கவேண்டும் என்றும், துரோணம் என்ற பதமே தொண்டைஎன மறுவிற்றென்றும், பல்லவகுலம் கடல்கெழு செல்வி வழியாக வந்த துரோணன் மரபென்றும்'' அரிய ஆராய்ச்சி விருந்து அளித்துள்ளார்.

இத் திரையன் பரம்பரை பழமைமிக்க தென்று பழைய இலக்கியங்களால் அறியக்கிடக்கின்றது. அகநானூற்றில்.

**வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்**
**இனமழை தவழு மேற்றரு நெடுங்கோட்டு**
**ஓங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்**

—அகநானூறு ; 231 : 1—3

என வருவது காண்க.

**ஞாயிற் றொளியான் மதிநிழற்றே தொண்டையர்**
**கோவீற் றிருந்த குடை**

என்று யாப்பருங்கல விருத்தி மேற்கோளும் கூறா நிற்கும். இவன் இளந்திரையன் எனவும், திரையன் எனவும், திரையல் எனவும் நூல்களில் வழங்கப்படுகின்றான். திருமுல்லை வாயில் புராணம் இவனைப் பேரரசனாக்கி ஆதொண்டைச் சக்கரவர்த்தி எனப்பெயர் சூட்டி, அதற்கு வேறு வரலாறும் கூறுகின்றது. இவன் இளந்திரையம் என்றோர் நூல் இயற்றினான் என்று இறையனார் அகப்

பொருளுரை, நன்னூல் மயிலை நாதருரை முதலியன தெரிவிக்கின்றன. மேலும் இவன் நற்றிணையில் மூன்று பாடல்களும் (94, 99, 106) புறநானூற்றில் ஒரு பாடலும் (185) பாடியுள்ளமையால் இவன் கவித்திறம் வல்ல காவலன் என்பதறியலாம். நன்னூல் மயிலைநாதருரையில் (ப; 245) திரையனூர் என்பதற்குத் திரையனாற் செய்யப் பட்ட ஊர், திரையனது ஊர் எனப் பொருள் விடுக்கப் பெறுதலால், இப்பெயருள்ள ஊரொன்று அந்நாளில், இவனால் நியமிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது புலனாகும். ''இன்னும் தொண்டை நாட்டில் திரையர் குலத்தைச் சேர்ந்த ஒருவன் பெயரால் திரையனேரி என்னும் ஊர் உண்டாயிற்று. அதுவே இப்பொழுது செங்கற்பட்டு நாட்டில் தென்னேரியாக விளங்குகின்றது'' என 'ஊரும் பேரும்' என்ற நூலில் பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இனித் தொண்டை நாட்டின் பெருமையினை நோக்கு வோம்.

"சேர நாடு யானைக்குப் பெயர்போனது; சோழ வளநாடு சோற்றுக்குச் சிறப்புடையது; பாண்டி நாடு முத்துக்குப் பெருமை சான்றது; ஆயின் தெளிந்த நீர் வளம் சான்ற வயல்களையுடைய தொண்டை நாடோ வெனில் நன்கு கற்று வல்ல சான்றோர்கள் நிறைந்த பெருமைக்குரியது''—இவ்வாறு அறிவிற்சிறந்த ஔவையார் பாராட்டியுள்ளார். அந்தச் சிறந்த பாடல் வருமாறு;

**வேழ முடைத்து மலைநாடு மேதக்க**
**சோழ வளநாடு சோறுடைத்து பூழியர்கோன்**
**தென்னாடு முத்துடைத்து தெண்ணீர்வயற் றொண்டை**
**நன்னாடு சான்றோ ருடைத்து.**

மேலும் ஈண்டு மற்றொன்றும் கூர்ந்து நோக்கத்தக்கது. மூவேந்தர் நாட்டோடு பெருமைக்குரியதாக நான்காவதாக

இலங்கிய நாடு தொண்டை நாடு என்பதும் இதனுற் போதரும். இத்தொண்டைமண்டலம் தமிழ் நாட்டின் வடபகுதியாகும். இந்நாட்டின் பழைய எல்லை: மேற்கே பவளமலை; வடக்கே வேங்கடமலே: கிழக்கே கடல்; தெற்கே தென் பெண்ணையாறு. இதனைப் பின்வரும் பாடலிற் காணலாம்.

**மேற்குப் பவளமலை வேங்கடநேர் வடக்கா**
**மார்க்கு முவரி யணிகிழக்கு—பார்க்குளுயர்**
**தெற்குப் பினாகி திகழிருபதின் காதம்**
**நற்றொண்டை நாடெனவே நாட்டு.**

இத் தொண்டை நன்னாடுவயல்வளம் மிக்கது. வடக்கே வைணவத் திருப்பதிகளிற் சிறந்த திருப்பதியாம் திருப்பதி—திருவேங்கடமலை உளது. குலசேகரப்பெருமாள் தம் பெருமாள் திருமொழியில் 'ஊனேறு' என்த் தொடங்கும் பாசுரத்தில் திருவேங்கடமுடையான் விஷயமாகப் பல சிறந்த பாடல்களேப் பாடியுள்ளார். அவற்றில் 'அரம்பையர்கள் சூழ அரசாளும் விண்ணுலகப் பதவியும், மண்ணுலகச் சிறப்பும் வேண்டாது, திருவேங்கட மலையில் மறுபிறவியில் ஓர் மீனுய்ப் பிறக்கும் பேறு தமக்கு வேண்டும்'' என்கிருர்.

**ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ**
**வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்**
**தேனாற் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடைய னாவேனே.**

*நாலாயிரம்—பெருமாள் திருமொழி : 4:3*

இன்றும் இந்தியாவிலேயே மிகுந்த பொருள் வருவாயும், பக்தர் குழாம் பரந்து செல்வதுமான பதி திருப்பதியேயாகும்.

அடுத்து யாப்பருங்கலக் காரிகையில் மேற்கோள் செய்யுளாக ஒரு பாடல் வந்துள்ளது. அதில் 'உலகம் முழுவதும் ஒரு கழனி என்றும், அக்கழனியிலே விளை வயலாய் இருப்பன நாற்றிசைத் தேயங்கள் என்றும், அவ்விளை வயலில்—விளைந்த நீண்ட கரும்பே தொண்டை வளநாடு என்றும், அக்கரும்பிலிருந்து பிழிந் தெடுக்கப்பட்ட சாறே அந்நாட்டில் அமைந்துள்ள பேரூர்கள் என்றும், அச்சாற்றினைக் காய்ச்சி எடுத்த வெல்லக் கட்டியே காஞ்சிமா நகர்ப்புறம் என்றும் அக் கட்டி கொண்டு ஆக்கப் பெற்ற சருக்கரை மாமணியே கச்சியம்பதி என்றும், குறிப்பிடப்பட்டுள்ளது. அக் கற்பனை சிறந்த கவினுறு பாடல் வருமாறு:

**வையக மெல்லாம் கழனியா வையகத்துச்**
**செய்யகமே நாற்றிசையின் றேயங்கள் செய்யகத்து**
**வான்கரும்பே தொண்டை வளநாடு வான்கரும்பின்**
**சாறேயந் நாட்டுத் தலையூர்கள் சாறட்ட**
**கட்டியே கச்சிப் புறமெல்லாங் கட்டியுட்**
**டானேற்ற மான சருக்கரை மாமணியே**
**ஆனேற்றான் கச்சி யகம்.**

தொண்டைவள நாட்டின் தலைநகரம் காஞ்சிபுர மாகும். இந்தியாவில் உள்ள புண்ணியப் பதிகள் ஏழனுள் ஒன்றாகக் காஞ்சியினை வடமொழிப் புராணங்கள் கூறு கின்றன. புத்தர் தம் பௌத்த சமயக் கருத்துகளைக் காஞ்சியில் பரப்பியதாகச் சீனயாத்திரிகர் இயூன்சாங் குறிப்பிடுகின்றார். 100 அடி உயரமுள்ள அசோகத்தூண் ஒன்று காஞ்சியில் புத்த சமயக் கருத்துகள் பொறிக்கப் பெற்று விளங்கியது. நாளாந்தாப் பல்கலைக் கழகத்தில் சிறந்த பேராசிரியராக விளங்கிய தர்மபாலர் காஞ்சிபுரத் தைப் பிறப்பிடமாகக் கொண்டவர். கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த வடமொழி இலக்கணப் புலவர் பதஞ்சலி தமது மா பாடியத்தில் காஞ்சியைக் குறிப்பிட்

டுள்ளார். 'கல்வியிற் கரையிலாத காஞ்சிமா நகர்' என்று கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் தம் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார். 'நகரேஷு காஞ்சி' என்பது வடமொழித் தொடர். தண்டியலங்காரத்தின் மேற்கோள் செய்யுளொன்று கடலைக்காட்டிலும் கச்சிக்குப் பெருமை உண்டென்று குறிப்பிடுகின்றது. எவ்வாறு? ''காஞ்சியில் கிடைக்கும் பொருள்கள் அனைத்தும் கடலில் கிடைக்க மாட்டா; ஆனால் கடல்படு பொருள்கள் எல்லாம் காஞ்சியில் கிடைக்குமாம்.'' இவ்வாறு கூறுகின்றார் தண்டியாசிரியர்,

> **மலிதேரான் கச்சியும் மாகடலுந் தம்மில்**
> **ஒலியும் பெருமையும் ஒக்கும் மலிதேரான்**
> **கச்சி படுவ கடல்படா கச்சி**
> **கடல்படுவ வெல்லாம் படும்.**

மேலும், இத் தொண்டை நாட்டில் திருவேங்கடத் தோடு திருமுருகன் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக் கும் திருத்தணிகை, 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்' என்று மணிவாசகர் பாராட்டிய கண்ணப்பர் முத்தி பெற்ற திருக்காளத்தி, நல்ல மூலிகைக் காற்றினைக் கொண்டு உடலுக்கு உரமூட்டும் திருக்கழுக்குன்றம் முதலிய சிறப்புப் பொருந்திய மலைகள் உண்டு. பாலாறு, செய்யாறு, பெண்ணையாறு, ஆரணியாறு, நிவா, கூவம், அடையாறு முதலிய ஆறுகள் ஓடுகின்றன. புழலேரி, பழவேற்காட்டு ஏரி, செம்பரம்பாக்கத்தேரி, பூண்டி நீர்த்தேக்கம் முதலியன தொண்டை மண்டலத்தை வள நாடாக்குகின்றன. இப் போதைய செங்கற்பட்டு, வடார்க்காடு, தென்னார்க்காடு, சித்தூர் மாவட்டங்காள அந் நாளையத்தொண்டை மண்டலமாகும்? சைவத் திருப்பதிகள் முப்பத்திரண்டும் வைணவத் திருப்பதிகள் இருபத்திரண்டும் தொண்டை நாட்டிலுள்ளன, தமிழ் நாட்டின் 'டிராய்' (Troy) நகரம்

எனப்படும் செஞ்சியும், அழகிய பலம் வாய்ந்த கோட்டையைக் கொண்ட வேலூரும், தற்காலத் தமிழகத்தின் தலைநகரம் சென்னையும் தொண்டை நாட்டுப் பேரூர்களாகும்.

தொண்டை நாட்டுச் சிவனடியார்களாகத் திருத்தொண்டர் புராணம் பேசுவது எண்மரையாகும். அவர்கள் காளத்தி கண்ணப்பர்; காஞ்சிபுரம் திருக்குறிப்புத் தொண்டர், ஐயடிகள் காடவர்கோன், கழற்சிங்க நாயனார், திருவேற்காடு மூர்க்க நாயனார், திருவொற்றியூர் கலியநாயனார், மயிலாப்பூர் வாயிலார் நாயனார், திருநின்றவூர் பூசலார் நாயனார் முதலியோராவர்,

சிவபிரான் நடம்புரிந்த திருத்தலம் திருவாலங்காடாகும். காரைக்காலம்மையார் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் பாடிய இடம் இதுவே. அவர் தலையால் நடந்த இடம் இஃது என்பதால் திருஞான சம்பந்தர் இப்பகுதியை மிதிக்கவும் அஞ்சி, தூரத்தில் நின்றே வணங்கிச் சென்றார். திருவாலாங்காட்டிற் கருகிலுள்ள பழையனூரிலிருந்த வேளாளர் எழுபதின்மர் ஒரு வணிகனுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றும் பொருட்டு, தங்கள் அனைவர் உயிரையும் கொடுத்தார்கள் என்ற வரலாறுண்டு. 'வையம் பெறினும் பொய்தானுரைக்க மாட்டார் எனச் சொன்ன நாட்டார் திகழ் தொண்டை மண்டலமே' என்று தொண்டை மண்டல சதகம் கூறும். 'கொண்டலை நிகர்க்கும் வேளாண் குடியொடு தழுவிய' நாடு தொண்டை நாடு. 'ஆதவஞ் சூழ்தரு பல்கோடி தேசமனைத்தினுமா மாதவஞ் செய்ததன்றோ தமிழ்சேர் தொண்டை மண்டலமே' என்று மேலும் இந்நாடு புகழப்படுகிறது, நற்குண நற்செய்கைகளில் மேம்பட்டோரும், வீரஞ்சிறந்தோரும் வாழும் இடமும் இதுவே.

வெண்பாவிற் புகழேந்தி, காரார் களந்தைப் புகழேந்தி, மாலார் களந்தைப் புகழேந்தி, ஐயன் களந்தைப் புகழேந்தி

எனப் புகழப்படும் நளவெண்பா தந்த புகழேந்திப் புலவர் பிறந்தபெருமைக்குரிய பொன்விளைந்த களத்தூர் நேமிநாத ஆசிரியர் குணவீர பண்டிதருக்கும் பிறப்பிடமாகும், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவரான தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் பிறந்த பதியும் தொண்டை மண்டலப் புலியூர்க் கோட்டத்துக் குன்றத்தூ ராகும். 'நூலிற் பரித்தவுரை யெல்லாம் பரிமேலழகன் தெரித்தவுரையாமோ தெளி' என்றபடி திருக்குறளுக்குச் சிறந்த உரை கண்ட பரிமேலழகர் பிறந்து வாழ்ந்த ஊர் கச்சியம்பதி யாகும். கச்சியப்ப சிவாச்சாரியார் கந்தபுராணம் பாடி அரங்கேற்றிய இடமாம் கந்தகோட்டமும் கச்சியம் பதியிலேயே உள்ளது. அம்மை மயிலாக விளங்கித் தவம் இயற்றியது மயிலாப்பூராகும்; இம் மயிலாப்பூரில்தான் திரு ஞான சம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய அற்புதம் நிகழ்ந்தது. திருவள்ளுவர் பெருமான் வாழ்ந்ததாகக் கூறப் படுவதும், திருவள்ளுவர் கோயில் இருப்பதும் இத்திரு மயிலாப்பூரேயாகும். சுந்தரர் மணந்ததும் பட்டினத்தார் சமாதியடைந்ததும் திருவொற்றியூராகும். தொண்டை மண்டல சதக ஆசிரியர், நன்னூல் தந்த பவணந்தி முனிவரின் பிறப்பிடமான சனகாபுரத்தைத் தொண்டை நாட்டுப் பகுதியாகவே குறிப்பிட்டுள்ளார்.

தொண்டை மண்டல சதகத்தின் ஆசிரியர் படிக்காசுப் புலவர் ஆவர். இவர் இயற்பெயர் அறியக் கூடவில்லை. 'பண்பாய உயர் சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணாதே' என்ற பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் சொற்கொண்டு இவர்தம் கவிதைப் புலமையினை அறியலாம். இவர் பதினேழாம் நூற்றாண்டினர்; சைவ சமயத்தினர். ஸ்ரீமத் உப சுப்பிரமணியரென்றும், சேனைத் தலைவரென்றும் சொல்லா நின்ற செங்குந்த மரபினர். தென்னாட்டுத் தல யாத்திரையின்போது தில்லையைச் சேர்ந்த தில்லையம் மையை வழிபாடாற்றியபொழுது அம்மையின் அருளால் ஐந்து பொற்காசுகளைப் பஞ்சாக்கரப் படியில் பெற்றார்.

அதனால் படிக்காசர் என்னும் பெயர் வந்தெய்தியது. மாமண்டூர் கஸ்தூரி முதலியார் திருமகனார் கறுப்ப முதலியார் வேண்டுகோட்கிணங்கத் தொண்டைமண்டல சதகம் பாடினார், மேலும் சிவந்தெழுந்த பல்லுவனுலா, சிவந்தெழுந்த பல்லவன் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம், உமைபாகர் பதிகம், பாம்பலங்காரர் வருக்கக் கோவை முதலிய நூல்களும் இவர் இயற்றியனவே. இவர் பாட்டின் நயத்தினைப் பின்வரும் பாடல் கொண்டு நன்கு தெளியலாம்:

**மாட்டாருந் தென்களந்தைப் படிக்காசன்**
**உரைத்த தமிழ்வரைந்த ஏட்டைப்**
**பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும்**
**பரிமளிக்கும் பரிந்தவ் வேட்டைத்**
**தொட்டாலும் கைமணக்குஞ் சொன்னாலும்**
**வாய்மணக்கும் துய்ய சேற்றில்**
**நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே**
**பாட்டிலுறு நளினந் தானே.**

வைணவர்கள் போற்றும் உடைவவர் ஸ்ரீமத் இராமானுஜர் வாழ்ந்த பதியாம் ஸ்ரீபெரும்புதூர் தொண்டை மண்டலத்தில் உள்ளது. காளியப்பன், நெற்குன்றவாணன், காளத்திவாணன், ஏகம்பவாணன், கறுப்பன், மணிகண்டன் முதலிய வள்ளல்கள் அந்நாளில் இந்நாட்டில் வாழ்ந்து வரையாது வாரி வழங்கினர்.

'காசினியோர் வாணாளளவுந் துதிப்பதன்றோ தொண்டை மண்டலம்' என்றும், 'மன்னாவுலகத்து மன்னிய சீர்த் தொண்டை மண்டலமே' என்றும் 'பாரதம் பாடும் பெருந்தேவர் வாழும் பழமபதிகாண் மாருதம் பூவின் மணம் வீசிடுந் தொண்டை மண்டலமே' என்றும் 'தொண்டை நன்னாடு புரக்கின்ற கோனந்தித் தோன்ற லெங்கள் வண்டையர் கருணாகரன்றொண்டை மண்டலமே'

என்றும் தொண்டை மண்டல சதகம் சிறப்புறத் தொண்டை வளநாட்டின் பெருமையினைப் பறைசாற்றிப் பேசுகின்றது.

இவ்வாறாகத் தொண்டை நாடு அன்றும் இன்றும் வரலாற்றுப் பெருமையினாலும், சமய உண்மையினாலும், இலக்கிய சிறப்பினாலும், தல மேன்மையினாலும், வேளாளர் தம் விருந்தூட்டும் சிறப்பினாலும், நெசவுத் தொழில் நேர்த்தியினாலும், பண்பட்ட சான்றோர் வாழும் பழம்பெருஞ் சிறப்பினாலும் இன்னும் பல்லாற்றாலும் சிறந்து விளங்கக் காணுகின்றோம்.

# 8. தமிழ்க் காப்பியங்கள்

தமிழ் இலக்கியம் மிகப் பழமையானது; வரலாற்றின் தொடக்கக் காலத்திலேயே தனக்கேயுரிய தூய தனித் தன்மை வாய்ந்த இல்க்கியப் போக்கினை அமைத்துக் கொண்டது; தமிழ்த்தாய் என்று பிறந்தனள் என்று இயம்பமுடியாத அளவிற்கு, இயல்பினளாய் இருப்பவள். தமிழ்மொழி பழமையிலும், சொல்வளத்திலும், இலக்கண வரம்புடைமையிலும், செய்யுள் வகையிலும், பண்பாட்டுச் சிறப்பிலும் தலைசிறந்தது என அறிஞர் பலர் கூறிப் போந்தனர். உலகின் பிறநாடுகள் நாகரிகம் பெறாத நாளிலேயே தமிழ்மொழியில் கணக்கற்ற இலக்கிய இலக் கணச் செல்வங்கள் அழகுபெற்று மிளிர்ந்தன.

மொழியின் வாயிலாக வாழ்க்கையை வடித்துக் காட்டுவதே இலக்கியம் என்பர். மனிதனின் உள்ளுணர்ச்சி யினைத் தூண்டிவிட்டு, மனித வாழ்விற்கு அரணாக நின்று செம்மை இன்பம் பயப்பன இலக்கியங்களாகும். எள்ளி னின்று எண்ணெய் எடுபடுவது போல, இலக்கியத்திலிருந்து எடுபடும் இலக்கணம் என்பர் ஆன்றோர். அம்முறையிற் பார்ப்பின் இன்று நமக்குக் கிடைக்கும் மிகப் பழமையான நூல் தொல்காப்பியமாகும். அஃது ஓர் இலக்கண நூல் என்பது அனைவரும் அறிந்த ஒன்று. தொல்காப்பியத் திற்கு முன்னர்ப் பல இலக்கண நூல்களும் இருந்திருத்தல் வேண்டும் என்பது, தொல்காப்பியனார் தம் நூலின் பலவிடங்களில் 'என்ப' 'எம்மனார் புலவர்' 'நூலறிபுலவர் 'நுண்ணிதின் உணர்ந்தோர்', 'யாப்பறி புலவர்' என்று

குறிப்பிட்டுள்ளதினின்றும் அறியலாம். அத்தகு பழமையும் பெருமையும் வாய்ந்த தொல்காப்பியத்திலே நாம் தமிழ்ச் செய்யுட்களின் இலக்கணம் கூறும் செய்யுளியலினைப்பொருளதிகாரத்தில் காண்கிறோம். இத்தகைய பழைய யாப்பு முறைபிற இலக்கணங்களில் அமைந்து கிடப்பது அருமை.

தொல்காப்பியனார் தமிழ்ச்செய்யுள் வகையினை ஏழு வகையாகப் பாகுபடுத்திப் பேசுகின்றார்.

**பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே**
**அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்**
**மண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்**
**நாற்பெய ரெல்லை யகத்தவர் வழங்கும்**
**யாப்பின் வழிய தென்மனார் புலவர்.**

—தொல்காப்பியம் : செய்யுளியல் :79,

இதிலிருந்து பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி அங்கதம், முதுசொல் ஆகிய ஏழும் தமிழ்ச் செய்யுளின் வகைகள் என்பது புலனாகின்றது. ஆயினும் முதல் மூன்றே இவற்றுள் தலைமை சான்றவைகளாய் வழங்குகின்றன.

பாட்டினைத் தனிநிலைச் செய்யுள், தொடர்நிலைச் செய்யுள், நாடகச்செய்யுள் எனமூவகையாக உரையாசிரியர்கள் பகுப்பர். தொடர் நிலைச்செய்யுள் எனப்படுவதே காப்பியங்களாகும். ஆங்கிலத்தில் இதனை 'Epic' என வழங்குவர். தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்திலே குறிப்பாக மெய்ப்பாட்டியல். உவமவியல், செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கு இயல்களில் காப்பிய இலக்கணத்தின் வரையறை ஓரளவு நமக்குத் தெரிவிக்கப்பெறுகின்றது. காப்பியத்திற்குரிய சுவைகளை மெய்ப்பாட்டியலிலும், அலங்காரம் எனப்படும் அணிகளை உவமவியலிலும் காப்பிய வகை, நடைகுறித்த செய்திகளை வனப்பு வண்ணங்களைப் பற்றிப் பேசும செய்யுளியலிலும் நாம்

அறிந்துணர முடிகின்றது, இன்ன பொருளை இன்ன சொல்லால் முந்தையோர் மரபு கண்டு கூறவேண்டும் என்று பழைய மரபிற்கு அரண் அமைக்கும் மரபியலும் காப்பிய மரபிற்கு ஓரளவிற்குத் துணை செய்வதே யாகும்.

தமிழில் செய்யுள் இலக்கணத்தை உணர்த்தும் தமிழ் நூல்கள் மிகப்பல என அறிகிறோம். தொல்காப்பியம், மாபுராணம், பூதபுராணம், அவிநயம், பல்காப்பியம், பல்காயம், காக்கை பாடினியம், சிறுகாக்கை பாடினியம், சங்க யாப்பு, கையனார் யாப்பு. நத்தத்தர் யாப்பு, மயேச் சுரர் யாப்பு, முதலியன யாப்பினை விளக்க எழுந்த நூல் களாகும். பிற்காலத்தே யாப்பருங்கலக்காரிகை, வீரசோழி யம், தமிழ்நெறி விளக்கம், இலக்கண விளக்கம், தொன்னூல், முத்து வீரியம் முதலியன யாப்பிற்கு இலக்கணம் வகுத்த நூல்களாகும்.

காப்பியம் என்பது காவ்யம் என்னும் வடசொல்லின் திரிசொல்லாகும். கவியாற் செய்யப்படுவது எதுவோ அது காப்பியம் என வழங்கும். பொதுவகையான் செய்யுட்கள் அனைத்தும் காவியமென்று கூறத்தக்கனவாயினும், தமிழ் மொழியின் வழக்காற்றில் பொருட்டொடர் நிலைக்கே அப் பெயர் வழங்குகின்றது. கவிஞர்கள் இயற்றும் பாடல்கள் அனைத்தும் சிறப்புக்குரியவைதான் என்றாலும், அவற்றுள் காப்பியங்கள் தனிச்சிறப்புப் பெறுகின்றன. இதனைத் தண்டியலங்கார உரையாசிரியர் ''கவியாற் பாடப்படுவன வெல்லாம் காப்பியமல்லவோ, பொருட்டொடர் நிலை யைக் காப்பியமென்றது என்னையெனின், சேற்றுள் தோன் றுவன வெல்லாம் பங்கயமெனப் பெயர் பெறுமாயினும், அப்பெயர் தாமரை ஒன்றன்மேற்றே யாயினவாறுபோல இப்பெயர் பொருட்டொடர் நிலைக்கே ஆயிற்று' என்பர். மனைவியின் உரைக்கு ஒப்பாகக் காவியத்தைக் கூறுதல் வட மொழியாளர் மரபு மொழியின் சிறப்பினையும் அணிகலத் தினையும் புலப்படுத்துவது ஒரு மொழியில் அமைகின்ற

காவியங்களேயாகும். வனப்பினைப் பற்றி விளக்கவந்த இடத்தில் தொல்காப்பிய உரையாசிரியர் பேராசிரியர் பின் வருமாறு கூறுகின்றார். ''பல செய்யுளும் உறுப்பாய்த் திரண்டு பெருகிய தொடர் நிலையதே வனப்பென்னும் பெயர்ப் பகுதி வகையான் ஏற்பதென்பது?' என்கிறார். இதிலிருந்து ஒரு மொழியின் வனப்புகள் அனைத்தினையும் புலப்படுத்துவது அம்மொழியில் அமைந்த தொடர்நிலைச் செய்யுட்களால் ஆகிய காப்பியங்களே ஆகும் என்பது புலனாகின்றது.

காப்பியம் என்ற சொல் பொருட்டொடர் நிலைச் செய்யுள், கதைச் செய்யுள், அகலக்கவி, தொடர்நிலைச் செய்யுள், விருத்திச் செய்யுள் எனப் பலபடியாக வழங்கப் பெறும்.

பொருள் தொடர்ந்து வந்து'பல அடிகளாலேனும், பல செய்யுட்களாலேனும் அமைந்து விளங்குவது பொருட் டொடர் நிலையாகும். இப் பொருட்டொடர் நிலையினை மூவகையாகக் காண்பர். முதலாவது பொருள் மட்டும் தொடர்ந்து வந்து கதை தழுவாது வரும் தொடர்நிலைச் செய்யுளாகும். இப்பிரிவில் பத்துப்பாட்டும், பொருள் பொதிந்த பிரபந்தங்களும் அடங்கும். இரண்டாவது பிரிவு தொடர்ந்து கதை தழுவிவந்து, அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கு உறுதிப் பொருள்களில் சிலவற்றையே கூறுவது. இவ்வகையில் மணிமேகலை, நீலகேசி, பெரிய புராணம், கந்தபுராணம் முதலியன அடங்கும், மூன்றாவது பிரிவு, பொருள் தொடர்ந்து கதை தழுவி மேற்கூறிய நாற்பொருளையும் விளங்கச் செய்வது. பெருங்காப்பியங்களும், நாடகங்களும் இவ்வகையில் அடங்குவனவாகும்.

தொல்காப்பியனார் செய்யுளியலில் அம்மை, அழகு, தொன்மை: தோல்: விருந்து, இயைபு, புலன், இழைபு என எண்வகை வனப்புகளைச் செய்யுளின் உறுப்புகளாகக்

கூறியுள்ளார். தண்டியலங்கார ஆசிரியர் பெருங்காப்பியத்தின் இலக்கணமாகப் பின்வருமாறு கூறியுள்ளார்.

**பெருங்காப் பியநிலை பேசுங் காலை**
**வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றின் ஒன்று**
**ஏற்புடைத் தாக முன்தர வியன்று**
**நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்**
**தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்**
**மலைகடல் நாடு வளநகர் பருவம்**
**இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து**
**நன்மணம் புணர்த்தல் பொன்முடி கவித்தல்**
**பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்**
**தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்**
**புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்**
**றின்னன புனைந்த நன்னடைத் தாகி**
**மந்திரந் தூது செலவிகல் வென்றி**
**சந்தியிற் றொடர்ந்து சருக்கம் இலம்பகம்**
**பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி**
**நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்**
**கற்றோர் புனையும் பெற்றிய தென்ப**

எனக் குறிப்பிட்டுள்ளார்.

வின்செஸ்டர் (Winchester) என்ற மேலை நாட்டு அறிஞர் விழுமிய உணர்ச்சி (Emotion), நல்ல கற்பனை வளம் (imagination), வடிவம் (Form), உள்ளீடாகிய கருத்து (Content) ஆகிய நான்குமே கவிதை சிறக்க அமைய வேண்டிய சிறந்த நான்கு பொருள்கள் என்பர். வடிவம் எனப்படுவது செய்யுள் யாப்பு ஆகும். பாட்டில் ஒரு முகமாக இயையும் முழுமை ஆகும். இலக்கியக் கலைக்கு வடிவம் இன்றியமையாதது. கவிஞர் தாம் உணர்ந்து அனுபவித்த உணர்ச்சிகளைப் பிறர் உள்ளத்திற் பதியச் செய்யக் கலையின் இந்த வடிவமே பயன்படுகின்றது.

பாட்டில் உணர்த்தப்படும் பொருளும், அப்பொருளைப் புலப்படுத்தப் பயன்படும் வடிவமும் பிரிக்க முடியாதன. கற்பனையுணர்ச்சியும் ஒலிநயமாகிய அதன் வடிவமும் ஒன்றுபட்டு இயைவதே நல்ல பாட்டாக மணம் கமழும்: பாட்டின் ஒலிநயம் முதலில் செவிகளுக்கு விருந்தூட்டி உட் சென்று உடலின் நரம்புகளை இயக்கும் ஆற்றல் பெற்றது.

தொல்காப்பியனார் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா. வஞ்சிப்பா ஆகிய நான்கு பாக்களைச் சிறப்பாகக் குறிக் கின்றார்; உணர்ச்சிமிக்க காதல் பாட்டுகள் கலிப்பா வாகவும், பரிபாட்டாகவும் அமைதல் வேண்டும் என்கிறார். ஏனெனில் இப்பாக்களின் ஒலிநயம் மிக்க இன்பம் பயப்ப தாகும், ஓசையின் நயத்தை வண்ணம் என்ற பெயரால் குறிப்பிட்டு, இருபது வண்ணங்களாகத் தொல்காப்பியனார் பாகுபாடு செய்துள்ளார். ஒலிகள் அளவாலும் தன்மையா லும் முயற்சியாலும் வேறுபட்டு ஒழுங்காக அமைந்து. வந்த அமைப்பே திரும்பத் திரும்ப வந்து இனிமை பயப்பது ஒலி நயம் எனக் கண்டோம். இயற்கையான இந்த ஒலிநயத்தை வளர்த்து வாய்பாடுகளாக்கி ஒருவகைச் செயற்கை அமைப்பைத் தந்தனர் முன்னோர், அதற்கு யாப்பு (Metre) எனப் பெயர் தந்தனர். இந்த யாப்பின்படி வெண்பா செப்பலோசையும், அகவற்பா அகவலோசையும், கலிப்பா துள்ளலோசையும், வஞ்சிப்பா தூங்கலோசையும் கொண்டு வரும். பிற்காலத்திலேதான் தாழிசை துறை விருத்தம் என்ற பாவினங்கள் தோன்றின.

காப்பியங்களுக்கு உரிய யாப்பினைப்பற்றித் தண்டிய யலங்காரத்தில் ஒரு நூற்பா வருகிறது.

அவை தாம்,

**ஒருதிறப் பாட்டினும் பலதிறப் பாட்டினும்**
**உரையும் பாடையும் விரவியும் வருமே**

என்பதாகும். இதன் பொருளாவது 'பெருங்காப்பியமும் காப்பியமும் ஒருவகைச் செய்யுளானும், பலவகைச் செய்யுளானும், உரை விரவியும் பாடை விரவியும் வரும்' என்பதாம். இவ்வகையில் ஒருதிறப்பட்டான் அமைந்த காப்பியங்கள் மணிமேகலை, பெருங்கதை என்பனவாம். இவை ஆசிரியப்பா யாப்பில் அமைந்துள்ளன. பலதிறப் பாட்டான்—அதாவது பல வேறுவகை யாப்பமைப்பில் வந்தவை சீவக சிந்தாமணி, சூளாமணி, கம்ப ராமாயணம் முதலியனவாம். உரையும் பாடையும் கலந்து வந்தது சிலப்பதிகாரமாகும்.

சங்ககாலத்தை அடுத்து ஆசிரியப்பாவே பெருவழக்காகக் காப்பியங்களில் பயிலப்பட்டது. ஒலிநயம் குறைந்தது ஆசிரியப்பாவாகும். இதன் ஆடரங்கம் எல்லைக்குட்பட்டது. ஆனால் விருத்தப்பா ஒலிநயம் மிக்கது. தொடர் நிலைச் செய்யுட்களைச் சேர்ந்த பிற்காலப் புராணங்கள் பெரும்பாலும் விருத்த யாப்பிலேயே அமைந்துள்ளன. எனவேதான் விருத்தப்பாவிற்கு இலக்கணம் கூறவந்த யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர் ''புராணம் முதலாகிய விருத்தம் உரைத்தலானும் விருத்தமென்பதூஉம் காரணக்குறி'' என்றார்.

வீரசோழிய உரையாசிரியர் கோவைக் கலித்துறை என்றும், காப்பியக் கலித்துறை என்றும் இருவகைப் பிரிவினைக் குறிப்பிடுகின்றார். கோவைக் கலித்துறை என்பது கோவை நூல்களில் அமைந்துள்ள கட்டளைக் கலித்துறையாகும். காவியக் கலித்துறை என்பது கலித்துறைச் செய்யுட்களாகும்.

தமிழில் ஐம்பெருங் காப்பியங்கள் என்று சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி ஆகிய ஐந்து நூல்களும், ஐஞ்சிறு காப்பியங்கள் என்று உதயணகுமார காவியம், நாககுமார

காவியம், யசோதர காவியம், சூளாமணி, நீலகேசி முதலிய ஐந்து நூல்களும் கூறப்பெறுகின்றன. இந்த ஐம்பெருங் காப்பியங்கள் எனும் வழக்கு வடமொழியின் பஞ்ச காவியம் எனும் அழைப்பைக் கொண்டு ஏற்பட்டதாக இருக்க வேண்டும்.

தொன்மை என்னும் வனப்பிற்கு உதாரணமாகப் பாரதம், தகடூர் யாத்திரை சிலப்பதிகாரம் முதலியனவும், தோலுக்கு உதாரணமாக மணிமேகலை, பெருங்கதை ஆகியவையும் தொல்காப்பிய உரையாசிரியர்களால் குறிப்பிடப்பட்டுள்ளன. கல்வியிற் பெரியராம் கம்பர் காப்பியங்களின் இயல்பாகச் சொல்வது ஈண்டு நினைவு கொள்ளத்தக்கது:

**புவியினுக் கணியாய் ஆன்ற**
**பொருள்தந்து புலத்திற் றாகி**
**அவியகத் துறைகள் தாங்கி**
**ஐந்திணை நெறிய ளாவிச்**
**சவியுறத் தெளிந்து தண்ணென்**
**றொழுக்கமும் தழுவிச் சான்றோர்**
**கவியெனக் கிடந்த கோதா**
**வரியினை வீரர் கண்டார்.**

—கம்ப: ஆரணிய; சூர்ப்ப: 1

தமிழில் இன்று கிடைக்கும் காப்பியங்களில் காலத்தால் மிகவும் முற்பட்டது சிலப்பதிகாரமாகும். அந்நூல் ஒரு குடிமக்கள் காவியம்; பெரிதும் ஆசிரியப்பா யாப்பில் அமைத்த காவியம். உரை இடை இடையே வருவதால் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்றும், முத்தமிழும் விரவிவருவதால் முத்தமிழ்க் காப்பியம் என்றும் நாடகப் போக்குக் காணப்படுவதால் நாடகக் காப்பியம் என்றும் கூறப்படுவது. ஆசிரியப்பா உணர்ச்சியைப் புலப்படுத்த அவ்வளவாக விரிந்து

கொடுக்காதது. எனவே கானல் வரிப்பாடல்கள் விருத்த யாப்பு வகையில் அமைந்துள்ளன.

உதாரணமாக:

**பூவர் சோலை மயிலாலப் புரிந்து குயில்கள் இசை பாடக்**
**காமர் மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி**
**காமர்மாலை அருகசைய நடந்த வெல்லாம் நின்கணவன்**
**நாம வேலின் திறங்கண்டேன் அறிந்தேன் வாழி காவேரி'**

—சிலப்பதிகாரம், கானல்வரி: 26

என்ற பாட்டைக் குறிப்பிடலாம்.

அடுத்து, சிலப்பதிகாரத்தோடு ஒருங்கு சேர்த்து இரட்டைக்காவியம் என வழங்கப்படுகிற மணிமேகலை முழுக்க முழுக்க ஆசிரியப்பா யாப்பில் அமைந்தது.

**தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்**
**ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர்**
**முதியோர் என்னான் இளையோர் என்னான்**
**கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவிவ்**
**வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்**

—மணிமேகலை: 6: 97—101

என்று ஆசிரியப்பாவிலே விதியின் விளையாட்டுச் சுட்டப்படுகிறது. அக்கருத்தினையே விருத்தப்பாவிலே திருத்தக்க தேவர் சிந்தாமணியில் குறிப்பிடும் பொழுது அது நம் உள்ளத்தைப் பெருமளவிற்கு உருக்குகின்றது. அரண்மனையிலே பிறக்கவேண்டிய சீவகன் இடுகாட்டில் பிறக்கிறான். இவ்விதியின் விளையாட்டை எண்ணி விசயை புலம்புகிறாள்:

வெவ்வாய் ஓரி முழவாக
விளிந்தார் ஈமம்விளக் காக
ஓவ்வாச் சுடுகாட் டுயரரங்கின்
நிழல்போல் நுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக்
கூகை குழறிப் பாராட்ட
இவ்வா றாகிப் பிறப்பதோ
இதுவோ மன்னர்க் கியல்வேந்தே.

—சிந்தாமணி: நாமகள்: 279.

ஏமாங்கத நாட்டினை ஆசிரியர் வருணிக்கும் பொழுது விருத்தம் அவரைக் கைகொடுத்துத் தூக்கி விடுகிறது.

காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற் றிசைபோய துண்டே.

—சிந்தாமணி: நாமகள் ;2

வளையாபதி எனும் நூல் நமக்கு முற்றும் கிடைக்க வில்லை. உரையாசிரியர்கள் உரையில் காணப்படும் பாடல் களும், புறத்திரட்டில் சேர்க்கப்பட்டுள்ள அறுபத்தாறு பாடல்களும் தவிரப் பிற பாடல்கள் கிடைக்கவில்லை. மக்கட்பேற்றின் மாண்பைப் புலப்படுத்தும் ஆசிரியர்,

பொறையிலா அறிவு போகப் புணர்விலா இளமை மேவத்
துறையிலா வனச வாவித் துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி நலமிலாப் புன்மை நன்னர்ச்
சிறையிலா நகரம் போலும் சேயிலாச் செல்வ மன்றே

என்கின்றார். குண்டலகேசி எனும் நூலும் இன்று நமக்கு முழுதும் கிடைக்கவிலலை. இந் நூலிற்குக் 'குண்டலகேசி

விருத்தம்' என்ற பெயருமுண்டு. வாழ்க்கையின் அவலத்தை ஒரு பாடல் நன்கு படம் பிடித்துக் காட்டுகின்றது.

**பாளையாம் தன்மை செத்தும் பாலனும் தன்மை செத்தும்**
**காளையாம் தன்மை செத்தும் காமுறு மிளமை செத்தும்**
**மீளுமிவ் வியல்பு மின்னே மேவரு மூப்பு மாகி**
**நாளுநாள் சாகின் றாமால் நமக்குநாம் அழாத தென்னே.**

ஐஞ்சிறு காப்பியங்களில் சூளாமணி தவிரப் பிற நூல்களில் காப்பிய அமைதி சிறிதும் இல்லை. சிந்தாமணியின் நடை இடையிடையே தடைப்பட்ட நடை. ஆனால் சூளாமணியின் நடை செப்பமுற்ற— ஆற்றொழுக்கின் நடையாகும். சங்க காலத்திற்குப் பின் உண்டான காப்பியங்களுள் ஒன்று பெருங்கதை. அது நடையமைப்பும் பொருட் சிறப்பும் கொண்டது. சிந்தாமணிக்கும் முற்பட்ட நல்ல காவியமாகும் இது.

சிந்தாமணிக்குப் பிறகு தமிழ்க்காவிய உலகில் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டது. அதுவரையில் வழக்கிலிருந்த ஆசிரியப்பாவைக் கவிஞர்கள் கைவிட்டு, ஓசை நயத்திலும், சந்தத்திலும் மனத்தைச் செலுத்தினர். பழைய யாப்பு வரிசையில் கலிப்பா ஓசை நயம் மிக்கது. ஆனால் வெண்பாவும் ஆசிரியப்பாவும் சில நுண்ணிய வேறுபாடுகள் உடையனவேனும் பலவகை உணர்ச்சிகளுக்கு ஏற்பப் பல்வேறு ஓசை வேறுபாடுகளை அமைத்துக்காட்ட இடந்தருவன அல்ல. விருத்தப் பாவினைக் கம்பர் சிறக்கக் கையாண்டு 'ஒண்பா என்னும் உயர் விருத்தத்திற்குக் கம்பன்' என்ற பாராட்டினைப் பெற்றார்; சிந்தாமணி பாடிய திருத்தக்க தேவரினும் விருத்தத்தினைச் சிறக்கப் பாடியுள்ளார்.

குகன் பரதனுடைய சேனையைக் கண்டு சினம் மிகுந்த நிலையில் பாடும் பாடலை நாம் படிக்கும்பொழுது நாமும் அத்தகைய மன நிலையை—கொதிப்பு நிலையை அடைகின்றோம்.

**அஞ்சன வண்ணனென் ஆருயிர் நாயகன் ஆளாமே**
**வஞ்சனை யாலரசெய்திய மன்னரும் வந்தாரே**
**செஞ்சரம் என்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ**
**உய்ஞ்சிவர் போய்விடின் நாய்க்குகன் என்றெனை ஏசாரோ.**

—கம்ப: அயோ; குகப்: 14

அதே குகன் சினம் தணிந்த நிலையில் கம்பர் பாடும் பாடலைப் பார்ப்போம்.

**நம்பியுமென் நாயகனை ஒக்கின்றான் அயல்நின்றான்**
**தம்பியையும் ஒக்கின்றான் தவவேடம் தலைநின்றான்**
**துன்பமொரு முடிவில்லைத் திசைநோக்கித் தொழுகின்றான்**
**எம்பெருமான் பின்பிறந்தோர் இழைப்பரோ பிழைப்பென்றான்**

—கம்ப; அயோத்; குகப்; 30

இராமனை மயக்கும் நோக்கத்துடன் தன்னை நன்கு ஒப்பனை செய்துகொண்டுமெல்ல நடந்துவரும் சூர்ப்பணகை யின் நடை போலவே பாட்டும் வல்லோசையின்றி மெல் லோசை மிகுந்து நடைபோடுகின்றது.

**பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்**
**செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி**
**அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்**
**வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்**

—கம்ப: ஆரணிய: சூர்ப்ப; 31

முடிசூட்டு விழா, கைகேயினால் தடைப்பட்டுவிட்ட பிறகு இராமன் கோசலையின் கோயில் நோக்கிச் செல் கிறான். அப்போது அதனைக் கம்பர் பாடும் பாட்டு யாவர் மனத்தையும் நெகிழ்விப்பதாகும். இடத்திற்கேற்ற நடையமைப்பினைப் பெற்றுத் துலங்குகிறது செய்யுள்:

**குழைக்கின்ற கவரி யின்றிக் கொற்றவெண் குடையுமின்றி**
**இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம்பின் னிரங்கியேக**

**மழைக்குன்ற மனையான் மௌலி கவித்தனன் வருமென் றென்று**
**தழைக்கின்ற வுள்ளத் தன்னாண் முன்னொரு தமியன் சென் றான்.**

—கம்ப; அயோத்: நகர்; 2

அதிகரணி எனும் மடக்குவணியைக் கம்பர் பயன் படுத்தும் நயம் கண்டு தெளிக. கருத்திற்கேற்ற சந்தம் கீழ்க்காணும் பாட்டில் உளது.

**வெய்யோனொளி தன்மேனியின்**
**விரிசோதியின் மறையப்**
**பொய்யோவெனு மிடையாளொடு**
**மிளையானொடும் போனான்**
**மையோமர கதமோமறி**
**கடலோமழை முகிலோ**
**ஐயோவிவன் வடிவென்பதோ**
**ரழியாவழ குடையான்.**

—கம்ப; அயோத், கங்கை: 1

இவ்வாறாகக் காப்பியக் கவிஞர்கள் தம் காப்பியங் களில் தக்க இடங்களில் தக்க யாப்பிலும் தக்க சந்தத் திலும் தக்க வரிசை முறையிலும் சொற்களை அடுக்கி அமைத்துக் கவிதைக்கு அழகும் பொருளும் உணர்ச்சியும் ஊட்டியுள்ளார்கள். இது மகிழ்ந்து போற்றற்குரியதாகும்.

# 9. கல்வியும் கருத்தும்

உலகம் நாளுக்கு நாள் பல துறைகளில் மாற்றமும் முன்னேற்றமும் பெற்று வருகிறது: நேற்று இருந்தன பல இன்று புறக்கணிக்கப்படுகின்றன; நேற்று இல்லாதன பல இன்று புதுமையாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. காலங் காலமாக அழியாது நிலைத்து நிற்பனவும் சில உள்ளன; இவற்றினை முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் வாழ்ந்து வருவன எனலாம். பழமை என்ற காரணத்தினாலே மட்டும் ஒரு பொருள் பாராட்டப் பெறுவதும் தகாது; அதே நேரத்தில் பழமை என்றவுடனேயேசீறிச் சினந்து அதனைப் பழித்து விடுவதும் முறையாகாது. இது போன்றே புதுமை என்றவுடனேயே பற்றிக்கொள்வதும் அல்லது பழித்தொதுக்குவதும் அறிவுடைமை யாகாது. அவ்வப்பொருளின் அவசியத்தினை அலசி ஆராய்ந்து பின்னரே ஒரு முடிவிற்கு வரவேண்டும். இதனைச் சிவப்பிரகாசம் என்னும் சைவ சித்தாந்த நூல்,

> **தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று**
> **தோன்றியநூல் எனும் எவையும் தீ தாகா**

என்று குறிப்பிடுகின்றது.

மனிதனின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறையுள் முதலியன அன்றுபோல் இன்றும் தேவைப்படுகின்றன. பழங்காலத்து மனிதனின் உணவு உடை உறையுள் முதலியன முற்றிலும் இன்று மாறுபட்டிருக்கலாம். ஆயினும் இம்மூன்றும் அன்றைய மனிதனுக்கும் தேவைப்பட்டன.

விஞ்ஞான உலகத்தில் வாழும் இன்றைய மனிதனுக்கும் தேவைப்படுகின்றன. சிரிப்பு, அழுகை, இழிப்பு, வியப்பு, அச்சம், வீரம், சினம், மகிழ்ச்சி முதலாய மனிதனின் அடிப்படைப் பண்புகள்—குருதியோடு கலந்த உயிர்ப்பண்புகள் காலத்தால் மாறுவதில்லை. தொல்காப்பியனார்,

**நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று**
**அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப**

—தொல்: மெய்ப்பாட்டியல்: 3

என்று குறிப்பிட்டுள்ளார். அவர் குறிப்பிட்டுள்ள பண்புகள்—உணர்வுகள் இன்றும் மனித சமுதாயத்தில் நிலைத்து வேரூன்றி நிற்கக் காண்கிறோம். இப்பண்புகளை—உணர்வுகளைக் காவ வெள்ளமோ, சூழ்நிலையோ சிதைக்க வில்லை; மாறாக வழிவழிச் சிறந்து இவை வாழ்வு பெற்று வருகின்றன. ஜோட் என்னும் மேற்புலத்து அறிஞர் பெருமகனார், 'உணர்ச்சிகளையும் வேட்கைகளையும் பொறுத்த வரையில் நாம், நம் முன்னோர்களைப் போன்றே உள்ளோம். பழங்காலத்து மனிதர்களைப் போலவே விரும்புவதிலும் வெறுப்பதிலும் இக்காலத்து மனிதர்கள் அவர்களிடமிருந்தும் தங்களிடமிருந்தும் மிகச் சிறிதே வேறுபடுவர். அறிவாற்றலின் எல்லையைப் பொறுத்துத்தான் வேறுபாடுகள் தோன்றுகின்றன''[1] என்று புதிய எண்ணங்களுக்கு வழிகாட்டி' என்ற தமது நூலில்

---

1. At the level of the emotions and the appetites we are all very much alike. Contemporary human beings when hating and loving differ very little among themselves: more-over, they differ very little from human beings hating and loving in the paleolithic age. It is only at the level of their intellect that differences emerge.

—C. E. M. Joad, Guide to Modern thought p. 251

குறிப்பிட்டுள்ளமை ஈண்டு கருதற்குரியது. இவற்றால் மனிதன் பல துறைகளில் பழமையைப் போற்றிப் பாராட்டியும், பல துறைகளில் பழமையைப் போற்றி வரவேற்றும் வாழ்ந்துவளர்ந்து வருவது காண்கிறோம். இவ்வாறு பழமை கழிந்து புதுமை பூப்புதனை நன்னூலாசிரியர் பவணந்தி முனிவர்,

**பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல; கால வகையி னானே**

—நன்னூல்: உயிரியல்: 21

என்று குறிப்பிட்டுள்ளார். அவர் எழுதிய நன்னூலே தொல்காப்பியத்தினைப் பலவிடங்களில் பின்பற்றியும், சிலவிடங்களில் மாறுபட்டும் புதுவழி கொண்டும் இயங்கக் காணலாம்.

மனிதனின் அடிப்படைத் தேவைகளில் ஒன்று கல்வியாகும். 'கல்வி சிறந்த தமிழ்நாடு' என்றார் பாரதியார். "மணலில் உள்ள கிணற்றில் தோண்டிய அளவிற்குத் தண்ணீர் சுரக்கும்; அதுபோல் மக்களுக்குக் கற்ற கல்வியின் அளவிற்கு அறிவு ஊறும்" என்கிறார் திருவள்ளுவர்.

**தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத் தூறும் அறிவு.**

—திருக்குறள்: 396

எண்ணும் எழுத்தும் வாழும் மக்களுக்குக் கண்கள் என்றும், கல்லாதவரை முகத்தில் இரண்டு புண்ணுடையார் என்றும், கற்றவர்க்கு எங்குச் சென்றாலும் சிறப்பு கிடைக்கும் என்றும் கல்வியின் சிறப்பைப் பலவாறு கூறிய திருவள்ளுவர் மற்றப் பொருளினும் சிறந்த அழிவில்லாத செல்வம் கல்வியே என்றும் கூறியுள்ளார்.

**கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடல்ல மற்ற யவை.**

—திருக்குறள்: 400

'கல்வி யழகே அழகு' என்றும், 'மம்மர் அறுக்கும் மருந்து' என்றும் நாலடியார் கல்வியின் சிறப்பினைக் கூறும். களர் நிலத்தில் விளைந்த உறுப்பினைக் கழனியில் விளைந்த நெல்லினும் விழுமிதாகச் சான்றோர் கொள்வர் என்றும், அதனால் கற்றவர் தாழ்ந்த குலத்தில் தோன்றிய வராக இருப்பினும் சான்றோரால் உயர்வாக மதிக்கப் படுவர் என்றும், நாலடியார் மேலும் குறிப்பிட்டு, ஒருவன் தன் மகனுக்கு அளிக்கவேண்டிய செல்வம் கல்விச் செல்வமே என்றும் குறிப்பிடுகின்றது-

பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கல்விச்செல்வத்தின் மேன்மையை நன்குணர்ந்தவன். புரவலனாக விளங்கிய அப்பெரு மன்னன் புலவனாகவும் விளங்கி எழுதிய பாடல் ஒன்று புறநானூற்றில் காணப்படு கின்றது. அப்பாடல் வருமாறு-

**உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே**
**பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்**
**சிறப்பின் பாலால் தாயுமனந் திரியும்**
**ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்**
**மூத்தோன் வருக வென்னா தவருள்**
**அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்**
**வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்**
**கீழ்ப்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே.**

—புறம்: 183

''தன் ஆசிரியர்க்கு ஓர் இடையூறு ஏற்பட்ட விடத்து தீர்ப்பதற்கு வந்து உதவியும், மிக்க பொருளைக் கொடுத் தும் வழிபாட்டு நிலைமையை வெறாதும் கற்றல் ஒருவ னுக்கு அழகிதாகும். ஏனெனில் பிறப்பால் ஒரு தன்மையும் ஒரு வயிற்றுப் பிறந்த ஒற்றுமையும் உடையவர்களாயிருப்

பினும் அவர்களில் கல்வி கற்ற ஒருவனையே பெற்றெடுத்த தாய் பெரிதும் விரும்புவாள். ஒரு குடியில் பிறந்த பலருள்ளும் வயதில் மூத்தோனை வருகவென்று அழைக்காமல், அவருள் அறிவில் மிகுந்தவனையே தன்னிடம் அழைத்து அவன் உரைக்கும் அறிவுரைப்படியே அரசனும் அரசியல் நடத்துவான். வேறுபாடு தெரியப்பட்ட நாற்குலத்துள்ளும் கீழ்க் குலத்தானென்று பாராது கல்விபொருட்டு ஒருவனுக்கு உயர்வு உண்டாவது உறுதியாகும்''—இத்தகைய கருத்துக் கள் இப்பாடலால் தெளிவாகின்றன. இக்கருத்தினையே நான்மணிக்கடிகை, 'ஒருகுடியிற் கல்லாது மூத்தானைக் கைவிடுபு, கற்றான் இளமை பாராட்டும் உலகு' என்றும், வெற்றி வேற்கை, 'அறிவுடையான் ஒருவனை அரசனும் விரும்பும்' என்றும் குறிப்பிடுகின்றன.

இவற்றால் கல்வி கற்றாரே பிறர் கருத்தில் நிற்பர் என்பதும், அவர் வாழ்வே முழுமை நிறைந்த வாழ்வு என்பதும், கல்வியற்றோர் வாழ்வில் ஒளி குறைந்து இருள் நிறைந்து காணப்படும் என்பதும் தாமே போதரும்.

பழங்காலக் கல்வி முறைக்கும் இக்காலக் கல்வி முறைக் கும் இடையே பெரியதொரு வேறுபாட்டினைக் காணலாம். அக்காலத்தே எல்லோரும் படித்திருக்க வேண்டும் என்று நினைக்கவுமில்லை; அவ்வாறு நினைத்திருப்பினும் அந் நினைவினை நனவாக்கிக்கொள்ள வாய்ப்பும் வசதியும் அவர்கள் பெறவில்லை. அவரவர்கள் தத்தமக்குரிய தொழில்களைத் தவறாது முறைப்படி ஆற்றி வருவதே இயைவது என்று கருதப்பட்டது. 'குரு குலக்கல்வி முறை' அந்நாளில் நிலவியது. மாணவர்கள் நல்ல ஆசிரியரை நாடிச் சென்று, சிலவாண்டுகள் அவரோடு உடனுறைந்து கல்வி கற்று முழுமை பெற்றுத் தத்தம் இடங்களுக்குத் திரும்பினர். அவர்கள் வாழ்ந்த காலம் ஏடும் எழுத்தாணியுமே இருந்த காலம். ஆசிரியர் மனப்பாடமாகத் தாம் கற்ற கல்வியைத்

தம் மாணவர்க்குச் சொல்லி, செவி வழியாகக் கல்வி வளர்ந்த காலம் அதுவாகும்.

உயர்குடிப் பிறப்பு, இரக்கம், கடவுள் வழிபாடு, பல நூற் பயிற்சி, பயிற்று வன்மை, நற்பண்பு, உலகியல் அறிவு முதலியன நிரம்பப் பெற்றவரே அன்று ஆசிரியராக மதிக்கப் பெற்றனர். மாணவர் மனக்கோணலைச் சரிப்படுத்தும் பணி ஆசிரியருடையதாகக் கருதப்பட்டது. மாணவனும், பாடங் கேட்கும்பொழுது பொழுதொடு சென்று, ஆசிரியர்க்கு வழிபாடாற்றி, அவர் குணத்தோடு பொருந்தப் பயின்று, அவர் குறிப்பின் வழியே நின்று, 'இருவென இருந்து, சொல்லெனச் சொல்லி,' பசித்துண்பவனுக்கு உணவிடத்துள்ள ஆசை போலப் பாடங் கேட்டலில் ஆர்வம் மிகுந்து, சித்திரப் பாவையைப் போலக் குணத்தினோடு அடங்கி, காதானது வாயாகவும், மனமானது கொள்ளுமிடமாகவும், முன்பு கேட்டனவற்றை மீண்டும் கேட்டு, அவ்வாறு கேட்டனவற்றை மறந்து விடாது உள்ளத்தில் விடாது பற்றியமைத்துக் கொண்டு, ஆசிரியர் 'போய் வா' என்ற பின் போதலே பாடங் கேட்டலின் வரலாறாகக் கருதப் பட்டது.

**கோடன் மரபே கூறுங் காலை**
**பொழுதொடு சென்று வழிபடன் முனியான்**
**குணத்தோடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்து**
**இருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்**
**பருகுவன் அன்ன ஆர் வத்தன ஆகிச்**
**சித்திரப் பாவையின் அத்தகவு அடங்கிச்**
**செவிவா யாக நெஞ்சுகளன் ஆகக்**
**கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்து**
**போவெனப் போதல் என்மனார் புலவர்.**

—நன்னூல்; பொதுப்பாயிரம்: 40

இந் நூற்பாவில் பவணந்தி முனிவர் 'என்மனார்

என்று கூறியிருப்பதனால் பவணந்தியார் காலத்திற்கு முன்பே விளங்கிய கல்வி கற்குநிலை புலனாகின்றது.

ஆனால், இக் காலத்தில்—குறிப்பாக இந்த நூற்றாண்டில்—விஞ்ஞான வளர்ச்சி காரணமாக வாழ்வின் பல துறைகளிலும் வசதிகள் பெருகிவிட்டன. மரத்தடிகளே அக் காலக் கல்வி நிலையங்களாக விளங்க இப்பொழுது பெரிய பெரிய கட்டடங்கள் பள்ளிகளாகவும், கல்லூரிகளாகவும், பல்கலைக் கழகங்களாகவும் விளங்கக் காண்கிறோம். எங்கோ சிலர் அக் காலத்தில் ஆசிரியத் தொழிலில் பணியாற்ற, இக் காலத்தே பலர் அப் பணியில் ஈடுபட்டிருப்பதைக் காண்கிறோம். ஏடும் எழுத்தாணியும் இருந்த இடங்களைத் தாளும் (பேப்பரும்) எழுதுகோலும் (பேனாவும்) கைப்பற்றி நிற்பது கண்கூடு. படிக்கும் மாணவர் தொகையில் பெண்களின் தொகையும் பெருகி வருவதனைக் காண்கிறோம். கல்வியில்லாத பெண்கள் களர் நிலம் என்றும், கல்வியையுடைய பெண்கள் திருத்தம் செய்யப்பட்ட நன்செய் நிலம் என்றும், கல்வி கற்ற பெண்கள் நல்ல பிள்ளைகளைப் பெற்றெடுப்பர் என்றும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் குறிப்பிட்டுள்ளார்.

**கல்வியில் லாத பெண்கள் களர்நிலம்! அந்நிலத்தில்**
**புல்விளைந் திடலாம்; நல்ல புதல்வர்கள் விளைதல் இல்லை**
**கல்வியை உடைய பெண்கள் திருந்திய கழனி! அங்கே**
**நல்லறி வுடைய மக்கள் விளைவது நவில வோநான்?**

கம்பர் கோசல நாட்டு மகளிரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அம் மகளிர் கல்வியும் செல்வமும் நிறைந்து, நாள்தோறும் விருந்தினரைப் போற்றி நல்வாழ்வு நடத்துகின்றனர் என்று கூறியுள்ளார்:

**பெருந்த டங்கண் பிறைநுத லார்க்கெலாம்**
**பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்**

**வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே?**

இவற்றால் பெண் கல்வியின் பெருமை புலனாதல் காணலாம்.

'அகில வுழுவதிலும் ஆழ உழு' என்பது பழமொழி. அக்காலத்தே பல புலவர்கள் தம் வாழ்நாளில் ஒரு சில நூல்களையே திரும்பத் திரும்பப் பயின்று அந்தந்த நூல் களில் வல்லவர்களாக விளங்கினார்கள். ஆனால் இன்று அத்தகைய நிலை இல்லை; அம் மரபில் வந்தோர் தொகை அருகிவருகின்றது. இக்காலப் பாடத்திட்டத்தில் மாணவர் கள் பலவற்றைப் பற்றியும் ஓரளவாவது தெரிந்திருக்க வேண்டும் என்று வரையறுக்கப்படுகிறது. மேலும் அக்கால மாணவர்களைக் காட்டிலும் இக்கால மாணவர்கள் வாழ்வில் கவர்ச்சிகள் பல உள்ளன. அன்று பரபரப்பை ஊட்டும் செய்தித்தாள்கள் இல்லை; கதைகளும் கட்டுரை களும் தாங்கிவரும் வார, திங்கட் பத்திரிகைகள் இல்லை; ஆங்காங்கே அரசியல் மேடைகளில் ஒலிக்கும் சூடான கருத்துகள் செவிகளைத் தாக்கவில்லை; அனைத்தினும் மேலாக, கண்ணையும் கருத்தையும் கவர்ந்திழுக்கும் திரைப்படங்கள் இல்லை. அக் காலத்து மாணவனைத் தனி யொருவராகப் பெரிதும் ஆசிரியரே உருவாக்கினார். இக் காலத்தே மாணவனை உருவாக்கும் பொறுப்பு, பலர் கையில் உள்ளது. மேலும் இக்காலக் கல்வி விளக்கத் திற்கு—அறிவு மேம்பாட்டிற்கு என்றில்லாமல், வயிற்றுப் பாட்டிற்கு வழி வகை செய்யும் வருவாய்க்குரிய வகைதேடும் ஒன்றாகவே உள்ளது. அண்ணல் காந்தி யடிகள் அவர்கள் இக்காலக் கல்வியினைப் 'பணியாளர் களை (clerks) உற்பத்தி செய்யும் சாதனம்' என்று குறை கூறியுள்ளமையும் ஈண்டு நினைவுகூரத்தக்கது. வகுப் பறையில் மாணவர் பயிலும் பாடத்திட்டக் கல்வியை

விடப் புறவுலகில் மாணவர் பெறும் கல்வி—அனுபவக் கல்வி மிகுதியாகவுள்ளது.

'கல்வி கரையில கற்பவர் நாள் சில' என்று கூறுகிறது நாலடியார். 'வாழ்வு சிறிது வளர்கலை பெரிது' என்பர் பெரியோர். நாள்தோறும் பல்வேறு துறைகளைப் பற்றிப்பல் வேறு நூல்கள் வெளிவந்து கொண்டிருப்பதனைக்காணலாம். நூல்கள் கல்வித் துறையில்—ஏன்? வாழ்வில் பெரும்பங்கு கொள்கின்றன. ''ஓர் உயர்ந்த நூல் உத்தமர் ஒருவரின் குருதிக்குச் சமம்'' என்று ஜான் மில்டன் குறிப்பிட்டுள்ளார்.[1] ''என்னை விட்டு நீங்காத நல்ல நண்பர்கள் நூல்கள்; அவர்களோடு நாளும் நான் உரையாடி மகிழ்கிறேன்'' என்று இராபர்ட் சதே என்னும் மேற்புலக் கவிஞர் அறிஞர்' என்ற தம் கவிதையில் குறிப்பிட்டுள்ளார்[2].

மரவேலை செய்யும் தச்சனுக்கு ஒரே சீரான நேரான மரம் கிடைப்பதில்லை. கோணலான மரம் கிடைப்பினும் அதனை ஒழுங்கு செய்து, தன் வேலைக்கு உகந்ததாக்கிக் கொள்கிறான்; பின், உறுதியான நூலை எடுத்து அதனைக் கரிக் குழம்பிலோ, செம்மண் குழம்பிலோ தோய்த்து மரத்தில் கோடிட்டுக்கொண்டு, மரத்தின் வளைவை—கோணலைப் போக்குகின்றான். அதே போலக் கருத்தி லிருந்து பிறக்கும் நூல் மனத்தின் கோணலைப் போக்கு கிறது, மேலும் செஞ்சொற் புலவன் ஆக்கிய நூல் உடம் பின் உள்ளிருக்கின்ற ஞானவளத்தை வளர்வித்து, தீமை யாகிய அஞ்ஞானத்தை அகற்றி, மனவிருள் போக்கி மாண்பினைப் புகட்டுகிறது என்று நன்னூல் நயமுற நவில்கின்றது.

1. A good book is a precious life-blood of a masterspirit, embalmed and treasured upon purpose to la life beyond life —John Milton

2. My never failing friends are they with whom converse day by day —Robert southey-'scholar'

**உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்**
**புரத்தின் வளமுருகிப் பொல்லா—மரத்தின்**
**கனக்கோட்டந் தீர்க்கும்நூ லஃதே போன் மாந்தர்**
**மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு**

—நன்னூல்: பொதுப்பாயிரம்; 25

இதனால் நூலின் சிறப்புப் புலனாகின்றது. நூல்களை மேனாட்டு அறிஞர் ஜான் ரஸ்கின் (John Ruskin) அவர்கள் இருவகையாகப் பிரிப்பர். படிக்கும் நேரம் மட்டுமே மகிழ்ச்சியை ஊட்டுபவை; படித்த பின்னர் எப் பொழுதும் மகிழ்வும் பலனும் ஊட்டி நிற்பவை (Books for the hour and books for ever) என இருவகை யாக அவர் நூலினைப் பகுத்துக் காண்பர். ஒரு குறிப் பிட்ட நேரத்திற்கு மட்டும் மகிழ்வூட்டி; கவர்ச்சி காட்டி மறையும் நூல்கள் பல; இத்தகைய நூல்கள் கணநேர உணர்விற்கு இரைபோடும் நூலகளாய் நிலைபேறு பெறா மல் மடிந்து போகின்றன. ஒரு நூலின் மதிப்பு, அந்நூல் எதிர்காலத்தில் எந்த அளவிற்கு நிலைபேறு உடையதா கின்றது என்பதனைப் பொறுத்ததாகும், எனவே ஒழுக் கத்திற்கு ஊறுஉண்டாக்கும் நூல்களை ஒரு நாளும் படிக்கக் கூடாது. கல்வியோடு மிகவும் ஒன்றி நிற்கவேண்டியது ஒழுக்கமாகும். ஒழுக்கமற்றோனின் உயர் கல்வி ஒரு போதும் உயர்ந்த சான்றோர்களால் மதிக்கப்படுவதில்லை. ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்பட வேண்டிய உயர்பண்பு என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. ஓதலினும் சிறந்தது ஒழுக்கமுடைமை என்பர்.

அடுத்து, நூலினைப் படிக்கும் முறையினையும் இனிது கருத்தூன்றிக் காணவேண்டும். ஒரு நூலினைப் படிப்பதற்கு முன்னரே அந்நூலினைப் பற்றிப் பிறர் கூறும் கருத்தையோ அல்லது தானாகவே அந்த நூலினைப்பற்றி ஒரு கருத்தினை உருவாக்கிக்கொண்டோ அந்நூலினைப் படிக்கத்தொடங்கக் கூடாது. எந்தவகையான எண்ணமும்

கொள்ளாமல் ஒரு நூலின் உட்சென்று உண்மை காண்பதே நூலினை அணுகும் முறையாகும். முன் கூட்டியே படிப்பவர் ஓர் எண்ணத்தைத் தம் உள்ளத்தில் உருவாக்கிக் கொண்டு படிக்கத் தொடங்குவாரேயானால், அவர் எண்ணத்திற்கு இயைந்த சான்றுகளையே அந்நூலில் தேடி நிற்பார். விருப்பு வெறுப்பற்ற—காய்தல் உவத்தல் அகற்றிய நடுவுநிலைமைப் போக்கு—ஞானியின் சமரச நோக்கு நூலாசிரியரின் உள்ளத்தினைத் தெள்ளத் தெளிவாகப் புலப்படுத்தும்.

மொழித்துறையினைப் பொறுத்த அளவில் மாணவர்கள் ஆற்றவேண்டிய அரும்பணி—தலையாய கடமையொன்றுளது. அதுவே மொழியினைப் பிழையறப் பேசுதலும் எழுதுதலும் ஆகும். தனித்தமிழ்ச் சொற்கள் கணக்கின்றிக் கவினுறக் கிடக்க, வேற்றுமொழிச் சொற்களை வேண்டுமென்றே தம் மொழியிடைக் கலந்து பேசுதலும் எழுதுதலும் நல்ல தீம்பாலில் நஞ்சினைக் கலப்பதொக்கும், கனியிருப்பக் காய் கவர்ந்த செயலுமாகும். மொழி வளம்பெறுவதும் வறுமையுறுவதும் அம்மொழி பேசும் மக்களைப் பொறுத்ததாகும்.[1] எனவே மொழியை வளர்ப்பவர்களும் மக்களே; மொழியால் வளர்பவர்களும் மக்களே என்ற உண்மையினை மாணவர்கள் உணர்ந்து மொழித்திறனை முட்டறுக்க முயல வேண்டும்.

மாணவர் சமுதாயத்தினை ‘எதிர்கால இந்தியாவின் சிற்பிகள்’ என்பர் அத்தகு மாணவ உலகிற்கு வேண்டுவன இவையே: எண்ணித் துணிதலும் எண்ணியவழிச் செயல்படுதலும் முதற்கண் தேவை; மாணவர்கள் கற்றலும்,

---

1. Language is enriched and impoverishd along with the enrichment and Impoverishment of their minds.
—Whitney, Language and the study of language p. 139

கற்ற வழி நிற்க வேண்டுமென்ற கட்டுப்பாடும், தெளிவான சிந்தனையும், தன்னம்பிக்கையும், ஊக்கமும் ஒழுக்க உணர்வும், நடுவு நிலை பிறழாத நன்னெறியும் கொண்டு திகழவேண்டும். 'மாண்' என்ற சொல்லிற்குப் பெருமை, சிறப்பு என்பது பொருள். மாணவர் என்றால் பெருமைக் குரியவர்கள், சிறப்பிற்குரியவர்கள் ஆவர். கல்வியும் கருத்தும் நிறைந்த மாண்புடையவர்களாக மாணவர்கள் திகழ்வார் களேயானால் அதனால் வீடும் நாடும் விளக்கமுற்று, ஒழுங்கும் உயர்வும் ஒளிர்ந்து மிளிர்ந்து நிறைந்திலங்கும் என்பதில் எத்துணையும் ஐயமில்லை.

# 10. வைணவ சமயத்தின் பழமை

மனித நம்பிக்கையின் அடிப்படையில் பிறந்தவை சமயங்களாகும். மனித வாழ்வு சீர்பெற்றுத் துலங்கப் பெரியோர்கள் வகுத்துச் சென்ற வழியே சமயமாகும். நல்லாற்றின் நின்று நன்னெறிப்பட்டு நல்வாழ்வு வாழவே சமயங்கள் வழிவகுக்கின்றன. பல்வேறு சமயங்கள் நம் நாட்டில் பல்கிப் பெருகியிருந்தாலும் தொன்மைச் சிறப் புடைத்தான சமயங்கள் சிலவேயாம். அச்சிலவற்றுள்ளும் சைவம், வைணவம், பௌத்தம், சமணம் என்னும் நான்கு சமயங்களும் தமிழகத்தில் பண்டுதொட்டு நிலவிவரும் சமயங்களாகும். இவற்றினுள்ளும் இந்த மண்ணில் தோன்றி மலர்ந்து, இன்னும் சிறக்க வாழ்ந்துவரும் சமயங்கள் சைவம் வைணவம் என இரண்டேயாம். இந்த இரண்டனுள் ஈண்டு வைணவத்தின் பழமை குறித்த செய்திகளை விரிவாகக் காண்போம்.

வைணவ சமயக் கடவுளான 'விஷ்ணு' என்ற சொல் லிற்கு 'எங்கும் வியாபித்துள்ளவன்' என்பது பொருளாகும். இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங் களிலும் கூறப்பட்ட கடவுளாக விஷ்ணுபர தேவதையாக வும் திருமூர்த்திகளில் ஒருவராகவும் குறிப்பிடப்படுகின்றார். பல்வேறு அவதாரங்களை இவர் எடுத்தது மன்பதையினைப் புரப்பதற்காக என்று நூல்கள் நவில்கின்றன. ''துட்டர் களை அழிப்பதற்கும் தூயோரைக் காப்பதற்கும் நான் யுகந்தோறும் அவதாரம் செய்கின்றேன்'' என்று கீதாசாரியனான கண்ணபிரான் கீதையில் மொழிந் துள்ளார். பாணினி சூத்திரப்பாடியத்தில் பதஞ்சலி முனிவர்

வாசுதேவனைப் பரதெய்வமாகக் குறிப்பிட்டுள்ளார். கோசண்டி என்ற ஓர் இடத்தில் கிடைத்த கல்வெட்டு கொண்டு, கி. மு. 700-க்கு முன்னரேயே வாசுதேவனுக்குக் கோயில் கட்டி வழிபாடு செய்யும் வழக்கம் இருந்தமையினை அறிஞர் ஆர். ஜி. பந்தர்கார் தெளிவுபடுத்தியுள்ளார். இவ்வாறு வேதபுராண இதிகாசங்கள் கொண்டு வைணவ சமயத்தின் தொன்மையினைச் சுட்டிக் காட்டலாம்.

இனிப் பழந்தமிழ் நூல்களில் வைணவ சமயங் குறித்தும் வைணவ சமயக் கடவுளான திருமால் குறித்தும் உள்ள செய்திகளை முறையே நோக்குவோம்.

பழந்தமிழ் இலக்கணப் பெரு நூலான தொல்காப்பியத்திலேயே திருமால் வணக்கம் பேசப்படுகின்றது. நிலத்தை நான்காகப் பகுத்து அந்நிலங்களுக்குரிய கடவுளரையும் கூறும் தொல்காப்பியனார் 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்று, காடும் காட்டைச் சார்ந்த முல்லை நிலத்திற்குக் கடவுளாக மாயவனாம் திருமாலைக் குறிக்கின்றார். அகத்திணை இயலில் இவ்வாறு குறிப்பிட்டதோடு அமையாது புறத்திணையியலிலும்,

**மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்**
**தாவா விழுப்புகழ் பூவை நிலையும்**

—தொல்காப்பியம், புறத்திணை இயல்: 60

என்று தொல்காப்பியனார் மாயோனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். ''மாயோனுடைய காத்தற் புகழை மன்னவர்க் குவமையாகக் கூறும் பூவை நிலை'' என்று நச்சினார்க்கினியர் இப்பகுதிக்கு உரை வரைந்துள்ளார். மேலும் புறநானூற்றுப் பாடற்பகுதி யொன்றினையும் தம் உரைக்கண் பொதிந்து தந்துள்ளார். அது வருமாறு:

**கடல்வளர் புரிவளை புரையு மேனி**
**அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்**

**மண்ணுறு திருமணி புரையு மேனி**
**விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்**

—புறநானூறு : 56 : 3—6

என்ற இப்பகுதியில் பலராமனும் மாயோனும் குறிக்கப்படுகின்றார்கள். அகநானூற்றில் தனுஷ்கோடித் துறையில் ஓர் ஆலமரத்தின் கீழ்த் தங்கி வானர சேனைகளோடு இலங்கைமேற் படையெடுப்பு குறித்து ஆலோசனை செய்தபோது அப்பறவைகள் ஒலியெழுப்ப, அதனைத் தன் கைகள் காட்டி ஒலிசெத்து அடங்கச் செய்தான் இராமன் என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது:

**வென்வேல் கவுரியர் தொன்முது கோடி**
**முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்துறை**
**வெல்போர் இராமன் அருமறைக் கவிந்த**
**பல்வீழ் ஆலம் போல.**

—அகநானூறு : 70 : 13—16

அடுத்து இராமாவதாரக் கதைக் குறிப்பு புறநானூற்றில் பேசப்பட்டுள்ளது. இராவணனால் கவர்ந்து கொண்டு செல்லப்பட்ட சீதை தன் அணிகலன்களைக் கழற்றிப் பூமியில் எறிந்ததும், அதனைக் குரங்குக் கூட்டங்கள் கண்டெடுத்து முறை தவறிப் புனைந்து நகையெழுந்ததுமான செய்தி

**கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை**
**வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை**
**நிலஞ்சேர் மரதாணி கண்ட குரங்கின்**
**செம்முகப் பெருங்கிளை.**

—புறநானூறு : 378 : 18—21

எனக் கூறிச் செல்லும் பகுதியால் அறியப்படும்.

மேலும் பரிபாடலில் எட்டுப் பாடல்கள் திருமாலைப் பற்றியனவாகும். பிரமன் சிவன் இருவர்க்கும் தந்தை திருமால் என்றும், படைத்தல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் காரணமாகவும் பல பிறப்புகள் எடுப்பினும் பிறப்பித்தோர் இல்லை என்றும், உலகத்து உயிர்களின் உறுகண் நீக்கும் உரவோன் என்றும் பின்வரும் பரிபாடற் பகுதிகள் கொண்டு அறியலாம்.

**இருவர் தாதை! இலங்குபூண் மாஅல்!**

—*பரிபாடல் 1 : 28*

**முதன்முறை இடைமுறை கடைமுறை தொழிலின்**
**பிறவாப் பிறப்பிலை; பிறப்பித்தோ ரிலையே**

—*பரிபாடல் : 3 : 71—72*

**எவ்வயின் உலகத்துந் தோன்றி அவ்வயின்**
**மன்பது மறுக்கத் துன்பம் களைவோன்.**

—*பரிபாடல் : 15 : 51—52*

இவை தவிரப் பத்துப்பாட்டின் பலவிடங்களிலும் திருமாலைப் பற்றிய குறிப்பு வந்துள்ளது:

கருடக் கொடியோன் திருமால் என்பதும், அவன் காக்கும் கடவுள் என்பதும்,

**புள்ளணி நீள்கொடிச் செல்வன்**

—*திருமுருகாற்றுப் படை : 151*

என்றும்,

**நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய**
**உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கை**

—*திருமுருகாற்றுப்படை : 160—61*

என்றும் வரும் திருமுருகாற்றுப்படைத் தொடர்கள் கொண்டு தெளியலாம்.

**இருநிலங் கடந்த திருமறு மார்பின்**
**முந்நீர் வண்ணன் பிறங்கடை**

—பெரும்பாணாற்றுப் படை : 30—31

என்றும்,

**அவ்வயின் அருந்திறற் கடவுள் வாழ்த்தி**

—பெரும்பாணாற்றுப்படை; 390-391

என்றும் வரும் பெரும்பாணாற்றுப்படை அடிகளால் திருமால் ஈரடியால் மூவுலகமும் அளந்தவர் என்றும், அவர் திருவெஃகா என்னும் திருத்தலத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார் என்றும் அறியலாம்:

**நேமியொடு, வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மா அல் போல**

—முல்லைப்பாட்டு: 1-3

என்ற முல்லைப்பாட்டின் அடிகள் கொண்டு திருமால் ஆழிப்படையினையும் வலம்புரிச் சங்கினையும் கைகளில் தாங்கியுள்ளார் என்றும், மாவலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் வேண்டிச் சென்று, அவன் அவர் கேட்ட பொருளை அர்க்கிய நீர் வார்த்துக் கொடுத்த அளவில் அவனுக்குப் பேருருவம் கொண்டு காட்சி தந்தனர் என்றும் அறியலாம். திருமாலின் பிறந்தநாள் திருவோணம் என்பது

**கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நன்னாள்**

—மதுரைக் காஞ்சி: 590-91

என்ற மதுரைக் காஞ்சி அடிகளால் விளங்கும்.

கலித்தொகையின் பல பாடல்களில் திருமால் பேசப்படுகின்றார். 'வள்ளுரு நேமியான்' என்றும், 'பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய ஆடுகொள் நேமியான்' என்றும், 'தேயா விழுப்புகழ்த் தெய்வம்' என்றும், 'ஞால மூன்றடித்தாய முதல்வன்' என்றும் பலவாறு திருமாலின் புகழ் கிளத்திக் கூறப்பட்டுள்ளது.

திருக்குறளில் வரும்

**மடியிலா மன்னவன் எய்தும் அடிஅளந்தான்**
**தாஅயது எல்லாம் ஒருங்கு** —திருக்குறள்: 61

என்ற குறட்பாவும்,

**தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்**
**தாமரைக் கண்ணான் உலகு**

—திருக்குறள்: 1113

என்ற குறட்பாவும் திருமாலைப் பற்றிக் குறிக்கும் எனக் கூறுவர் சிலர்.

திரிகடுகம் என்னும் பதினெண் கீழ்க்கணக்கைச் சார்ந்த நூலில்,

**கண்ணகன் ஞால மளந்ததூஉம் காமருசீர்த்**
**தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததும்—நண்ணிய**
**மாயச் சகட முதைத்ததூஉம் இம்மூன்றும்**
**பூவைப்பூ வண்ண னடி**

—திரிகடுகம்: காப்பு

என்று காணப்படும் வெண்பாவில் திருமால் உலகளந்ததும், குருந்த மரத்தைச் சாய்த்ததும், மாயச் சகடம் உதைத்ததும் ஆன கதைக் குறிப்புகள் காணப்படுகின்றன.

சிலப்பதிகாரத்தில் மாங்காட்டு மறையோன் கோவலனுக்குத் திருமாலின் கிடந்த திருக்கோலத்தை,

**நீலமேகம் நெடும்பொற் குன்றத்துப்**
**பால்விரிந் தகலாது படிந்தது போல**
**ஆயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற்**
**பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த**
**விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்**
**திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்**

—சிலப்பதிகாரம் : 11 : 35-40

என்றும், திருமாலின் நின்ற திருக்கோலத்தை,

**வீங்கு நீரருவி வேங்கடம் என்னும்**
**ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை**
**விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்க**
**இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து**
**மின்னுக் கோடியுடுத்து விளங்குவிற் பூண்டு**
**நன்னிற மேகம் நின்றது போலப்**
**பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந்**
**தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி**
**நளங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு**
**பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய**
**செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்**

—சிலப்பதிகாரம்: 11:41—51

என்றும் வருணிக்கின்றான்.

கண்ணகி காண மாதரி வீட்டில் ஆய்ச்சியர்கள் ஆடிய குரவைக் கூத்து முழுவதும் திருமாலின் பெருமையினைப் பலபடப் பேசுவதாகவே உளது. ஒரு பாடல் மட்டும் ஈண்டுக் குறிப்பிடப்படுகின்றது:

**மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பா வகைமுடியத்**
**தாவியசே 'வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து**
**சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த**

**சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே**
**திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே!**

—சிலப்பதிகாரம்; ஆய்ச்சியர் குரவை

இவ்வாறாகப் பழந்தமிழ் நூல்களில் வைணவ சமயத்தின் சிறப்புப் பேசப்பட்டுள்ளது.

விஷ்ணு விரும்பியுறையும் தலங்களில் மிகப் பழமையானவை திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருவரங்கம், காஞ்சிபுரம் முதலிய திருப்பதிகளாகும் என்பதனைப் பின்வரும் வெண்பாவால் அறியலாம்:

**தேனோங்கு சோலைத் திருவேங்கட மென்றும்**
**வானோங்கு சோலைமலை யென்றும்—தானோங்கு**
**தென்னரங்க மென்றும் திருவத்தி யூரென்றும்**
**சொன்னவர்க்கும் உண்டோ துயர்!**

திருமால் தம் திருப்பெயரினை உருக்கத்தோடு உரைத்தால் துன்பமெல்லாம் தொலைந்து 'தீயினில் தூசாகும்! என்று கருதப்படுவதன் அடிப்படையில்,

**நாவுண்டு நீயுண்டு நாமம் திரித்தோதப்**
**பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ—பூவுண்டு**
**வண்டுறங்கும் சோலை மதிளரங்கத்தே உலகை**
**உண்டுறங்குவான் ஒருவன் உண்டு**

என்ற பாடல் உருக்கமாக—உறுதியாக எழுந்தது.

இவ்வாறு நற்பதத்தினை நல்கும் திருமால் நெருப்பில் சூடாய், பூவினில் நறுமணமாய், கல்லினுள் மணியாய், சொல்லினுள் வாய்மையாய், அறத்தினுள் அன்பாய், மறத்தினுள் வலிமையாய், அனைத்துமாய், அனைத்தினுட் பொருளுமாய் விளங்குகின்றார் என்று பரிபாடல் கூறும்:

**தீயினுட் தெறல் நீ பூவினுள் நாற்றம் நீ**
**கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மை நீ**
**அறத்தினுள் அன்பு நீ மறத்தினுள் மைந்து நீ**
**.....................................**
**அனைத்தும்நீ அனைத்தினுட் பொருளும்நீ.**

—பரிபாடல்: *3: 63—68*

மேலும், குளிர்ந்த கடலின்கண் உள்ள ஒவ்வொரு நீர்த்திவலையிலும், பரந்த பூமி முழுவதிலும், மண்ணும் விண்ணும் மாறுபாடின்றி நுட்பமான எந்தப் பொருளி னுள்ளும் பரந்து திருமால் விளங்குகின்றான் என்பர்.

திருமால் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி விளங்கும் தன்மையினை வடமொழியில் 'அந்தர் யாமி' என்பர்.

இவ்வாறு பழந்தமிழ் இலக்கியங்களிலேயே வைணவத் தின் பழமையும் சிறப்பும் பேசப்படுகின்றன. திருமாலின் பிறப்பும், செயலும் கூறப்படுகின்றன. இடைக்காலத்தில் வைணவத்தின் பெருமையினை ஆழ்வாராதிகளும், பின்வந்த ஆசார்யப் பெருமக்களும் பெரிதும் வளர்த்தனர்.

# 11. குளிர் தூங்கும் குற்றாலம்

**இ**யற்கை மனிதனுக்கு எண்ணிறந்த எழிற் காட்சிகளை வாரி வழங்கி யிருக்கின்றது. பொன்னிறக் கதிர்களைப் பரப்பிக் காலைப் பொழுதில் கோலம் புதுக்கும் கதிரவன்; அவனே மாலைப் பொழுதில் மேற்கு வாயிலில் மறைகின்ற பொழுது, அந்திச் செக்கர் வானத்தில் மறைகின்ற அழகுக் காட்சி; இரவின் அமைதிச் சூழலில் வெண்ணிறக் கதிர்களைப் பரப்பித் தண்ணிலவு பொழியும் வெள்ளி நிலா; விண்ணைத் தொட உயர்ந்து நிற்கும் கரிய பெரிய மலை; அம் மலையினின்றும் சலசலத்து விழுகின்ற அருவி; அருவிக் கரையின் இரு மருங்கிலும் அழகு மலர்களை மலர்வித்து நிற்கும் பூங்கிளைகள்; நித்த நித்தம் புத்தம் புது மலர்கள் பூத்துக் குலுங்கும் மலர்த்தோட்டம்; நெடிதோங்கி வளர்ந்து நிற்கும் தென்னை மரங்கள்; வளமுடன் வளர்ந்து குலை சுமந்து நிற்கும் வாழை, கமுகு முதலிய மரங்கள்; கொத்துக் கொத்தாகப் பூந்துணர்விட்டுக் காய்த்துப் பழுத்துத் தொங்கும் மாம்பழங்களைக் கொண்டுள்ள மாமரம்; அம்மாமரக் கிளையில் அமர்ந்து, தவழ்ந்து வரும் தென்றலில் இன்னிசை முழக்கும் கோலக் குயில்; அக்கோலக் குயிலின் விந்தைக் குரலைக் கேட்டுத் தலையசைத்து நிற்கும் பச்சைப் பசுங்கிளி; மரகதக் கம்பளம் விரித்தாற் போன்று தளதளவென்று வளர்ந்து செறிந்து காணும் நெற்கதிர்கள்; அவைகளைத் தாய்போல் தழுவி நீவிவிட்டுச் செல்லும் தென்றல் ஆகிய இத்தகு எழில்மிகு காட்சிகள் எல்லாம் இயற்கை அன்னை மனிதனுக்கு வாரி வழங்கி யிருக்கும் வற்றாத அன்புப் பரிசுகளாகும்.

மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியே பொதிய மலை. பொதிய மலையில் பிறந்த மொழி தமிழ் மொழி. அது தென்றலுடன் தவழ்ந்து வருவது. இப்பொதிய மலையைச் சார்ந்ததுதான் திருக்குற்றாலமலை. கவினுறு காட்சிகளை வழங்கிக் கண்ணையும் கருத்தையும் குளிர்விப்பது இம் மலையே யாகும். வளமும் வனப்பும் நிறைந்த குற்றாலத்தை நினைக்கும் பொழுதே அழகிய அருவிகளின் கவினுறு காட்சிகள் நம் கண் முன்னே வந்து நிற்கின்றன. எழில் உணர்வையும் இன்ப உணர்வையும் புதுமை உணர்வையும் ஒருங்கே தருவது திருக்குற்றாலமாகும். தென்மேற்குப் பருவக் காற்று வீசத் தொடங்கிவிட்டால் குற்றாலமலையில் குளிர் சாரல் தொடங்கிவிடும். வைகாசித் திங்களின் பிற் பகுதியில் குற்றால மலை குளிர்ந்து மனத்திற்கு இதந் தரும் குளிர் காற்றைத் தருகிறது. சிறு தூறலும் இடையிடையே அமைந்து 'குளிர் தூங்கும் குற்றாலத்தின்' சாரல் களை கட்டி விடுகிறது. இக் கவின்மிகு காட்சியினை மனோன் மணீய ஆசிரியர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள்,

**கொண்மூ என்னும் கொள்கலம் கொண்ட**
**அமிழ்தினை அவ்வயின் கவிழ்த்தபின் செல்புழி**
**வழியும் நீ ரேநம் மிடிநீர் சாரல்**

என்று மேக முழக்கத்தினையும் மென்காற்றினையும் மலையினையும் போற்றுகின்றார்.

திருக்குற்றாலம் இயற்கை எழில் ஆனந்தக் கூத்திடும் அழகுத் திருவிடமாகும். குறிஞ்சி நிலக் காட்சிகள் உள்ளங்களை யெல்லாம் அள்ளிக் கொள்ளை கொள்ளும் நீர்மையனவாய் உள்ளன. குற்றாலத்தில் பல அருவிகள் உள்ளன. தேனருவி, செண்பக அருவி, வட அருவி, ஐந்தருவி, புலி அருவி முதலியன அவற்றில் குறிப்பிடத் தக்கவை. முழவதிர அதிர்ந்து மலையினின்றும் இவர்ந்து மெல்லிசைத் தீம்பண் மிழற்றிவரும் இவ்வருவிகளின் ஓசை செவியினைக் குளிர்

வித்துச் சிந்தையினை நிறைவிக்கும். தேவார காலத்திலேயே இவ்வருவிகள் சிறப்பிடம் பெற்று விட்டன. சைவம் தழைக்க வந்த சம்பந்த சுவாமிகள் குறிஞ்சிப் பண்ணில் அமைந்த தம் திருக்குற்றாலப் பதிகத்தில் அழகு அணி நடம் செய்யும் இக் குற்றாலத்தினை அழகுறப் பாடியுள்ளார். பலமுறை கண்டவர்க்கும் புதுமையே பொருந்தும் மலை; காலத்தாலும் இடத்தாலும் நீடிக்கும் சாரல்; கோலவண்டு யாழொலி மிழற்றும் சோலை; அவ்வழகுச் சூழலில் கொன்றைப் பூவினை விரும்பியமர்ந்து பால் நெய் யாடிய பரமன் உறையும் கோயில் ஆகிய அனைத்தையும் நம் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகிறார் சண்பைக் காவலர் சம்பந்தர். அப்பாடல் வருமாறு:

**வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்**
**கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்**
**அம்பால்நெய்யோ டாடல் அமர்ந்தான் அலர்கொன்றை**
**நம்பான் மேய நன்னகர் போலும் நமரங்காள்.**

''நீறணிந்து தொண்டர்கள் பின்செல்ல நாள் விழா நிறைந்த குற்றாலத்தில், முல்லை சண்பகம் வேங்கை முதலிய கொடிகளின் மீதும், மரத்தின் மீதும், மெல்லிய அரும்புகள் அரும்பியுள்ளன. பக்க மலைகளில் மா, பலா வாழை முதலிய முக்கனிகள் நிறைந்துள்ளன. குட்டியுடன் வந்த தாய்க் குரங்கு வாழைப் பழத்தை உண்ணுகின்றது. நீலமலர் போலும் கண்ணையுடைய குறத்தியர் மாணிக்கத்தைக் கொண்டு கிளியோட்டி, முற்றிய தினைக் கதிர்களைக் காப்பாற்றுகின்றனர்; சுனை சூழ்ந்த சோலையில் மயில் பெடையோடு விளையாடுகின்றது; பூக்களையும் பொன்னையும் உந்தித் தள்ளி அருவி நுண் துளி வீசுகின்றது. பாம்பின் பல்லைப் போலத் தோன்றும் குரவம் பாவையின் அரும்புகள் சோலையில் மலர்ந்து மணம் பரப்புகின்றன. வண்டுகள் இனிய செவ்வழிப் பண்ணை இசைக்கின்றன.''—இவ்வாறு குற்றாலத்தின் கோலமிகு இயற்கை யழகினை ஞாலம்

உய்யவந்த ஞானசம்பந்தப் பெருமான் மேலும் புனைந்து பாடியுள்ளார்.

திருக்குற்றாலக் குறவஞ்சி பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த திரிகூட ராசப்பக் கவிராயரால் இயற்றப்பட்ட நூலாகும். இந்நூல் குறவஞ்சி நூல்களிலேயே தலையாயது. பவனிவந்த தலைவனைக் கண்டு தலைவி மயங்கித் தன் நிலையைத் தோழிக்குக் கூறுதல், குறத்தி மலைவளம் முதலியன கூறிப் பின்னர்த் தலைவி கேட்ட குறி கூறிப் பரிசு பெறுதல், அவளைக் குறவன் தேடி வந்து காணுதல் முதலிய பகுதிகள் குறவஞ்சியில் இடம் பெற்றிருக்கும். திரிகூட மலையின் வளத்தினை இந் நூலில் இதன் ஆசிரியர் வருணித்திருக்கும் காட்சிக்கு ஏற்பவே அமைந்துள்ளமை அறிந்து மகிழத் தக்கதாம். ''ஆண் குரங்குகள் பலவகைப் பழங்களைப் பறித்துக் கொடுத்து மந்திகளோடு தழுவி விளையாடும்; அக் குரங்குகளால் சிதறி யெறியப்படும் பழங்களை வானுலகில் வாழும் தேவர்கள் இரந்து கேட்டு நிற்பர்; வானத்தில் வாழும் கானவர்கள் தம் கண்களால் ஏறெடுத்து நோக்கித் தேவர்களை அழைப்பர்; வானின் வழியே செல்லும் சித்தர்கள் கீழிறங்கி வந்து காயசித்தி தரும் மூலிகைகளை வளர்ப்பர்; தேன் அருவியானது அலைகள் மேலெழுந்து வானத்தினின்றும் வழிந்து ஓடும். அவ்வருவி ஓட்டத்தினால் ஞாயிற்றின் தேரிற் பூட்டிச் செல்லும் குதிரைக்கால்களும் தேர்ச்சக்கரமும் வழுக்கி விழும்; இக் குற்றால மலையில் பிறைசூடிய பெம்மான் உறைகிறான்; அதுவே எம் சொந்த மலை'' எனப் பெருமையுடன் கூறிக் கொள்கிறாள் குறத்தி.

**வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்**
**மந்தி சிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்**
**கானவர்கள் விழிஎறிந்து வானவரை அழைப்பார்**
**கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்**

**தேனருவித் திரையெழும்பி வானின்வழி ஒழுகும்**
**செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்**
**கூனவிளம் பிறைமுடித்த வேணிஅலங் காரர்**
**குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே.**

மேலும் சுழித்து ஒலித்து ஓடும் அலைகளையுடைய அருவி, செல்லும் வேகத்தில் கழங்காடுவது போன்று முத்துகளை ஒதுக்கிச்செல்லுவதோடு, மக்கள் வாழும் வீட்டின் முற்றங்களிலெல்லாம் பரவிச் சென்று சிறுமிகளின் சிறிய மணல் வீடுகளை அழித்துக்கொண்டு ஓட்டம் பிடிக்கின்றன.

**முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்**
**முற்றம் எங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண் டோடும்**

செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப் பந்தடிக்கின்றது: தேனலரும் சண்பகவாசம் வானுலகில் எட்டி மணக்கின்றது. காகம் அணுகாத மலையில் மேக நிரை சாய்கின்றது.

இவ்வாறு பிற்காலக் கவிஞராம் திரிகூட ராசப்பக் கவிராயர் வருணிக்கும் குற்றால மலையின் கோலக்காட்சிகள் தேவாரப் பதிகத்தில் வந்துள்ள காட்சிகளோடு ஒத்துள்ளன.

திருக்குற்றால மலையினின்று இழிந்து ஓடும் ஆறு சிற்றாறாகும். ''வளம் நிறைந்த இச்சிற்றாற்றின் துறையொன்றில் எருமைகள் கூட்டமாக இருக்கின்றன; அது போது கன்றை நினைந்து பாலைச் சொரிகின்றன. அந்தப் பாலினை வாளை மீன்கள் வாயாரப் பருகி அளவிற்கு மீறிய உவகையைப் பெறுகின்றன. அந்த உற்சாகத்தின் உந்தலில் கரையிலுள்ள சிறிய பலாமரத்தின் மீது பாய்கின்றன. அதனால் பலாப்பழம் உதிர்ந்து வாழையின் மேல் விழுகிறது. வாழைமரம் ஒடிந்து செழித்த தாழை

யைத் தாக்குகிறது. தாழைமடல் விழுந்து தன் மகரந்தத் தோடு கூடிய பூக்களைச் சோறுபோல் சொரிகின்றது. வந்த விருந்தினர்க்கு வகைபெற விருந்தோம்புவது போன்று சோற்றுக்கு இலை போடுவதுபோல வாழை தன் இளங் குருத்துகளை நீட்டுகின்றது.'' முன்னர் மலைவளத்தினை மாண்பு பெறக்கூறிய குறத்தி இவ்வாறு நாட்டு வளத்தினை நயமுற விளக்குகின்றாள்:

**கூழ மேதி இறங்குந் துறையிற்**
**சொரியும் பாலைப் பருகிய வாளை**
**கூழை வாசப் பலாவினிற் பாயக்**
**கொழும்ப லாக்கனி வாழையிற் சாய**
**வாழை சாய்ந்தொரு தாழையில் தாக்க**
**வருவி ருந்துக் குபசரிப் பார்போல்**
**தாழை சோறிட வாழை குருத்திடும்**
**சந்த்ர சூடர்தென் ஆரியநாடே.**

இத்தகு சிறந்த நாட்டை விட்டுச் செல்வதாகக் காணக் கிடப்பது பூக்களைச் சுமந்து வரும் நீரையுடைய புது வெள்ளமே; அடங்கி அமைதியுடன் இருப்பது யோகஞ் செய்வார் தம் உள்ளங்களே எனக்கூறுமுகத்தான் நாட்டின் வளமும், அந்நாட்டில் துலக்கமுறும் அமைதியும் தெற்றென விளக்கமுறுகின்றன.

**ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்**
**ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்**

இத்தகு தெய்வீகம் நிறைந்த நாட்டிலே அமைதியும் ஆனந்தமும் அருவியும் ததும்பும் அழகான இடத்திலே கோயில் கொண்டுள்ளார் குறும்பலா ஈசர்; அவர் முனிபர வும் இனியார்; வேத முழுப்பலாவின் கனி; கனியில் வைத்த செந்தேன்; குறும்பலாவின் முளைத்தெழுந்த தவக் கொழுந்து; அனைத்தினும் மேலாகச் 'சீரிய தமிழ் மாலைக் குட் செல்வர் குற்றாலத்தீசர்' என்பதாம். இவர் 'சாட்டி

நிற்கும் அண்டமெலாம் சாட்டையிலாப் பம்பரம் போல், ஆட்டுவிக்கும் அண்ணலராக' விளங்கி அடியவர்தம் மனமாசுகளைக் களைவிக்கின்றார். இத்தலத்து உறையும் இறைவனின் திருப்பெயர் குறும்பலா நாதர்; இறைவியாரது திருப்பெயர் குழல்வாய் மொழியம்மை. இத்தலத்தில் இறைவன் திருநடஞ்செய் சித்திர சபை ஒன்றுள்ளது; இச்சித்திர சபையில் அம்பலவாணன் அருட்கூத்து நிகழ்த்த, உமையம்மையார் தாளங்கொட்டி நின்று கண்டு களித்தனர் என்பது புராண வரலாறு. மேலும் திருக்குற்றாலப் புராணத்தில் வரும்,

**புந்தியுற நினைத்தார்க்கே**
**அருணகிரி புலியூர் தரிசனைக்கே பேறு**
**நந்துதவழ் திருவாரூர் பிறந்தார்க்கே**
**யிறந்தார்க்கு நல்குங் காசி**
**எந்தையாற் றிருவருளாற் பிறந்தார்க்கு**
**மிறந்தார்க்கும் எதிர்கண் டார்க்கும்**
**சிந்தையுற நினைந்தார்க்கும் அழியாத**
**கதிகொடுக்குந் திருக்குற் றாலம்**

—தலமகிமை, செய்யுள் : 18

என்ற செய்யுள் கொண்டு, நினைத்தாலே முக்தியளிக்கும் தலம் திருவண்ணாமலை என்றும், தரிசித்தாலே முக்தியளிக்கும் தலம் சிதம்பரம் என்றும், பிறந்தாலே வீடு நல்கும் தலம் திருவாரூர் என்றும்; இறந்தாலே முக்தியளிக்கும் தலம் காசி என்றும், பிறந்தார்க்கும், இறந்தார்க்கும், கண்டார்க்கும், கருதினார்க்கும் கதி கொடுக்குந் தலம் திருக்குற்றாலம் என்றும் தெரியவருகின்றோம். பிறதலங்களிலிருந்து பல்லாயிரம் ஆண்டுகள் தவமிருந்து பெறும் பலனைக் குற்றாலத் தலம் ஓராண்டில் தரவல்லது என்றும், 'திரிகூடம் கண்டவர்க்குத் தீராத வினையில்லை, யென்றும் வழங்கும் மொழிகள் கொண்டு இத்தலத்தின் சிறப்பினை அறியலாம்.

இத்தெய்வத் தலத்தினைத் திருநாவுக்கரசரும் மாணிக்கவாசகரும் பாடியுள்ளனர். ஆனால் அவர்கள் பாடல்களில் இயற்கை கொலு வீற்றிருக்கும் கவினுறு குற்றாலமாக இத்தலத்தினைக் காண முடியவில்லை. மாறாக வாழ்க்கையின் நிலையாமையினை வற்புறுத்திப் பிறவிப்பிணி தீர்க்கும் பெம்மான் குற்றாலத் துறையும் கூத்தனே என்பதனை அவர்கள் பாடல்கள் அறிவுறுத்து கின்றன.

இவ்வுலகில் நிலையாக நிலைத்திருப்பது நில்லாமையே ஆகும். தொல்காப்பியனார் புறத்திணையியலில் நிலை யாமை குறித்த தம் கருத்தினைப் பின்வருமாறு புலப் படுத்தியுள்ளார்.

**பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்**
**நில்லா வுலகம் புல்லிய நெறித்தே**

என்றும்,

**மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்**
**கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்**

என்றும்,

**மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்**
**பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்து**

என்றும் அவர் குறிப்பிட்டுள்ளமை இவ்வுலகின் இயல்பினை உள்ளவாறே உணர்த்துகின்றன. இதனைப் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புறநானூற்றுப் புலவர் 'மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே' என்றும், திருவள்ளுவர் 'ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லாற் பொன்றாது நிற்ப தொன்றில்' என்றும்,

**நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்து இவ்வுலகு**

—திருக்குறள் : 336

என்றும் குறிப்பிட்டுள்ளனர். 'நில்லாமை வுலகத்து நிலைமை' என்று நிலையாமையினைப் பொருநராற்றுப் படையும் பெரும்பாணாற்றுப் படையும் விளக்கியுள்ளன. நிலையாமையினை நாலடியாரில் வந்துள்ள ஒரு பாட்டு நயமுற விளக்குகின்றது :

''புல் நுனியின் மேல் நிற்கும் நீர்த்துளி போன்றது யாக்கை நிலையாமை என்று கருதி, இப்பொழுதே அற வினையை ஆற்றவேண்டும்; ஏனெனில் இப்பொழுது தான் ஒருவன் இங்கே நின்றான், இருந்தான், படுத்தான், உடனே தன் உறவினர் அலறி அழும்படி இறந்து விட்டான் என்று உலகத்தில் சொல்லப்படுகின்றது'' என்று கூறும் நாலடியாரின் பாடல் வருமாறு:

**புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி**
**இன்னினியே செய்க அறவினை—இன்னினியே**
**நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேள் அலறச்**
**சென்றான் எனப்படுத லால்.**

—நாலடியார் : 29

தவமுனிவராம் திருமூலர் யாக்கை நிலையாமையினை உணர்த்தும் முறை உள்ளத்தில் தெற்றெனப் பதியும் வண்ணம் அமைந்துள்ளது. மனைவியைக் கணவன் அறு சுவை உணவு ஆக்கச் சொன்னான். அவளும் அவ்வாறே தன் காதற் கொழுநனுக்கு அன்புடன் ஆக்கி அவனுக்குப் பரிமாறினாள். உணவு உண்டபின் அவன் மனைவியுடன் மகிழ்ச்சியோடு பேசிக்கொண்டே இருக்கும்போது இதயத் தின் இடப்பக்கமாகச் சிறிது நோகின்றதென்று சொன்

னான். கீழே படுத்தான்· படுத்தவன் படுத்தவனே; அவன் தீர்ந்தான்'' என்று வாழ்வின் அன்றாட நிகழ்ச்சியொன்றின் வழியே இவ்வுடலின் நிலையாமையினை உணர்த்து கின்றார்:

**அடப்பண்ணி வைத்தார் அடிசிலை யுண்டார்.**
**மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்**
**இடப் பக்க மேஇறைநொந்த தென்றார்**
**கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே.**

—திருமந்திரம்: 192

இத்தகைய வாழ்வின் புன்மையை எண்ணியே திருநாவுக் கரசர் தாம் இயற்றிய திரு அங்கமாலையில்,

**உற்றார் ஆருளரோ—உயிர்**
**கொண்டு போம்பொழுது**
**குற்றாலத்துறை கூத்தன் அல்லால் நமக்கு**
**உற்றார் ஆருளரோ**

என்று அறவுரை கூறியுள்ளார். பொருள் கொடுத்தாலும் கூற்றுவன் நம்மை விட்டுச் செல்லமாட்டானன்றோ! உற்றாரும் பெற்ற பெயரும் கூடக் கூற்றுவனைத் தடுத்து நிறுத்த முடியவில்லை அல்லவா? எனவேதான் மணிவாசகப் பெருந்தகை,

**உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்**
**வேண்டேன்**
**கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனி அமையும்**
**குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரைகழற்கே**
**கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே**

—திருவாசகம், திருப்புலம்பல் : 3

என்று குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தனை நோக்கிக் கன்றை ஈன்ற ஆப்போன்று கதறியழ வேண்டுமென்று

புலம்புகின்றார். வற்றா வட அருவியானைத் திரிகூட ராசப்பர் குறிப்பிடும் கூற்றிலும் இவ்வாழ்க்கைத் தத்துவம் பொதிந்துள்ளது.

**சுற்றாத ஊர்தோறும் சுற்றவேண்டாம் புலவீர்**
**குற்றாலம்என் றொருக்கால் கூறினால்.**

பிறவிப் பிணியாகிய நோயைத் தவிர்ப்பதற்கு வள்ளுவர் கூறும் வழி இதுவாகும். அதுவே பற்றினைத் துறந்து பரமன் அடியினைச் சேர்வதாகும்.

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு**

—திருக்குறள் : 350

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்**

—திருக்குறள் : 10

என்றும் அவர் கூறியுள்ளமை காண்க.

இவ்வாறு திருக்குற்றாலத்தினை எண்ணுகின்ற பொழுது இயற்கையின் கவின்மிகு காட்சிகளும், அதன் ஊடே ஒளிரும் வாழ்க்கையின் சீரிய தத்துவமும் தெற்றெனப் புலனாகும், குற்றாலத்தின் நெஞ்சை அள்ளும் கண்கொள்ளா வனப்பினைக் கவிதையில் கண்டு மகிழும் நெஞ்சம், அக் கவிதையில் உணர்த்தப்பெறும் நிலையாமைத் தத்துவத்தினை அறிந்து வாழ்வின் வெற்றியினை உணர்கின்றது. சங்ககாலக் கவிஞர்கள் இயற்கையின் இனிய காட்சிகளின் பின்னணியில் மக்கள் வாழ்வினை வடித்துக் காட்டினர். இடைக்காலத்தில் சமய குரவர்கள் இயற்கைச் சூழலின் இனிமையில் வாழ்க்கையின் தத்துவத்தினை வகையுற எடுத்து மொழிந்தனர். திரிகூடராசப்பக்

கவிஞர் போன்ற பிற்காலக் கவிஞர்கள் தம் கவிதைகளில் இயற்கை, வாழ்க்கை, தத்துவம் ஆகியவற்றைக் கோடிட்டுக் காட்டினர். இதனால் காலங் கடந்து வாழும் கவிதைகளில் வாழ்க்கைக்கு வேண்டிய கருத்துகள் வகையுற உணர்த்தப் படுகின்றன என்பது போதரும். அக் கருத்துகளைத் தேர்ந்து தெளிந்து, வாழ்வின் நிலையினை உணர்ந்து, நல் வாழ்வு வாழ நமக்கு உறுதுணையாக வழிகாட்டி நிற்பன 'குளிர் தூங்கும் குற்றாலம்' பற்றிய கவிதைகளாகும்.



**சி. பா.**

தேசிங்கு ஆண்ட செஞ்சியில் பிறந்தவர் (3-5-1935) இந்தச் செந்தமிழ்ச் செல்வர். கண்டாச்சிபுரமும் திருவண்ணாமலையும் இந்த இலக்கியப் பொழில், கற்ற இடங்கள். பைந்தமிழ் வளர்க்கும் பச்சையப்பன் கல்லூரிப் பாசறை மறவருள் ஒருவர். அன்னைத் தமிழில் பி.ஏ.ஆனர்சு. அங்கு, முதல் வகுப்பில் தேறிய முதல்வர். 'குறுந்தொகை' பற்றிய ஆய்வுரைக்கு 1963ல் எம்.லிட்., பட்டமும், 'சேரநாட்டுத் தமிழ் இலக்கியங்கள்' பற்றிய ஆய்வுரைக்கு 1970ல் டாக்டர் (பிஎச்.டி.) பட்டமும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் இவர் பெற்ற சிறப்புகள். நல்ல நடை கொண்ட இந்த நாகரிகர் பேர் சொல்ல நாளும் மாணவர் படை உண்டு நாட்டில்! சென்னைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகச் சேர்ந்தவர் பேராசிரியராகத் துறைத் தலைவராகச் சிறந்திருக்கிறார். முன்னாள் தமிழக ஆளுநருக்குத் தமிழை முறையாகப் பயிற்றுவித்த ஆசிரியர், இந்த முற்றிய புலமையாளர்!

பத்து நூல்கள் படைத்துள்ள இவர் ஒப்பருந் திறனுக்கும் உயர் தமிழ் அறிவுக்கும், 'தமிழ் இலக்கிய வரலாறு' ஒன்றே சான்று! அண்மையில் வந்துள்ள அணிகலன், 'பெருந்தகை மு. வ. ஆங்கிலத்தில் ஒரு நூல்! சங்ககால மகளிர் நிலை பற்றிய ஆராய்ச்சி. இலக்கிய அணிகள்' என்ற நூல் தமிழக அரசின் இரண்டாயிரம் உருபா முதல் பரிசைப் பெற்றது. படித்துப் பல பட்டம் பெற்ற இந்த பைந்தமிழ் வேந்தர்க்குப் பலரும் கொடுத்துள்ள புகழ் மகுடங்கள்: புலவரேறு (குன்றக்குடி ஆதீனம்) செஞ்சொற் புலவர் (தமிழ் நாட்டு நல்வழி நிலையம்), சங்கநூற் செல்வர் (தொண்டை மண்டல ஆதினம்).

பெருந்தகை மு.வ.வின் செல்லப்பிள்ளை சி.பா. அவர் புகழ் பாடும் அந்தமிழ்த் தும்பி: அயராது உழைக்கும் அருஞ் செயல் நம்பி! இலக்கியப் பேச்சில் இன்ப அருவி! எழுத்தில் நல்ல இலக்கியப் பிறவி!

சி.பா. இந்த ஈரெழுத்து ஒரு மொழி, இளைஞர்களுக்குச் சொல்வது சிறக்கப் பாடுபடு!

—மா. செ.